உ

கடவுள்துணை.

சித்தூர்ஜில்லா

# அதாலத்துக்கோர்ட்டு தீர்ப்பு.

பண்டிதர்

**மார்க்கசகாய ஆசாரியருக்கும்,**

பஞ்சாங்கம் குண்ணையருக்கும்,

பஞ்சாயத்தார் முன்னிலையில்

**விஸ்வப்பிராமணீகத்தைக் குறித்து**

நடந்த சம்வாதமும்,

பஞ்சாயத்தார் தீர்மானமும்.

மேஜிஸ்டிரேட்டுதுரையவர்கள் கொடுத்த

தீர்ப்பும்,

சித்தூர்ஜில்லா அதாலத்துக்கோர்ட்டு

மகாகனம்பொருந்திய கவர்ன்மெண்டு ஜ

**டேக்கர்துரையவர்கள்**

கொடுத்த தீர்ப்பும்,

பூவிருந்தவல்லி,

**சுந்தர.முதலியாரது,**

சுந்தரவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1880.

உ

கடவுள் துணை,



# விளம்பரம்.



இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில், மதுரை புதுமண்டபத்தில் பீங்கான்ஷாப்புக்கடைவியாபாரஞ்செய்யும் ம-ா-ா-ஸ்ரீ, ச-பீருகாதமொஹிதீன்ராவுத்தரவர்கள் கடையிலும், திருநெல்வேலி பொஷ்தகஷாப்பு வியாபாரஞ்செய்யும் ச-பீ-சேகு அப்துல்காதிருராவுத்தரவர்கள் கடையிலும், தமிழ், துலுக்கு, கிரந்தம், தெலுங்கு, காமேலெழுத்தான புஸ்தகங்களும், யாழ்ப்பாணம் புதியபதிப்பு அகராதியும், ஆரியப்பபுலவரால் செய்த பாகவதகவியும், ஷாப்புவியாபாரமும்வேண்டியவர்கள் விலைசரசமாய்ப் பெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கி ஷை குமாரர்

ச-பீ-சேகு அப்துல்காதிருராவுத்தர்.

# அந்தாலத்துகோட்டுதிப்பு.

மா - ஆ - எஜுர்வேதம் மூன்றாவது உபநிஷதத்தின் சூத்திரா ர்த்தவாக்கியத்தில்.

தஸ்யாத் ஸியேவக்ஷிகா அணியோர்த்வாவ்யவஸ்தி
ஓம்இத் ஸியேகாக்ஷரம் ப்ரம்மஹவியாஹரந்,

తస్యమధ్యేవహ్నిశిఖాఅణీయోర్ధ్వావ్యవస్థితః।
ఓంఇత్యేకాక్షరంబ్రహ్మవ్యాహరన్।

என்று சொல்லியபடி அந்த விராட்விஸ்வப்ரம்மமாகியபரப்ரம்மம் அவ்யக்தமும் அருவ உருவங்களும் குணகுறிகளும் இல்லாதவாய் நிர்மய நிஷ்கள வஸ்துவாயிருக்கின்றனர்.

(௪) ப - கு - அந்தப்ரம்மம் அருவ உருவங்களற்றவனென்றீரே அப்படிக்கிருக்க விஸ்வப்ரம்மமென்றுசொல்லும் விதியென்ன

மா - ஆ - அந்தவிராட் விஸ்வப்ரம்மத்தை அந்தர்முகமாய் நோக்குகையில் அருவ உருவங்களற்றவனென்றும் பகிர்முகமாய் நோக்குகையில் ரூபமுடையவனென்றும் சொல்லவேண்டியதாயிருக்கின்றது அதெப்படியென்றால் உலகத்திலகாணும் சிருஷ்டிகள்யாவும் அவரல்லாமல் இல்லையாகையால் அதுகள் அவரேயென்றும் அந்த சிருஷ்டிக்கர்த்தாவை நாமெல்காணக்கூடியதில்லையாகையால் அரூபமென்றுஞ்சொல்லலாயிற்று,

(௫) ப - கு - ப்ரம்மத்திற்கு பகிர்முகத்தில் ரூபமுண்டென்றீரே அதைவிபரமாய்த் தெரிவிக்கக்கோருகிறேன்.

மா - ஆ - விராட்விஸ்வப்ரம்மத்திற்கு அண்டாண்டபிரம்மாண்டங்களே சரீரம்அதுவெப்படியென்றால் பிரமனென்றுசொல்லும்பிருதிவு அந்த விராட்விஸ்வப்ரம்மத்திற்குப் பாதமென்றும் விஷ்ணுவென்னும் அப்பு தொப்புளென்றும் உருத்திரனென்னுந் தேயு மார்பென்றும மகேஸ்வரனென்றும் வாய்வுமார்புமுதல் புருவமத்தியமென்றும்சதாசிவமெனச்சொல்லும் ஆகாயசிரமென்றுஞ் சொல்லப்படும்.

அந்தப்பிரம்மத்திற்குச் சந்திரன்மனது திக்குக்களே காது விஷ்ணு தோள்கள் அக்கினியே வாக்கு மிருத்யூவே குதம்வாயுவே தொக்கு சூரியனே கண்ணன் வருணனேநாவு பூமிதேவியே மூக்கு அக்கியாமியே புருஷன் இவைகளே அப்பிரமத்திற்கு தேகம் அந்த விஸ்

## சித்தார்ஷில்லர்,

சங்கள். வச்சிரசூசி சகாகண்டம் சிற்பநூல்முப்பத்தாலடில்விச்சுவ கருமம் விச்சுவேசம் விச்சுவசாரம் விருத்தம் நாலட்டம் சாம்பேயம் அருமான் பானுகற்பாரியம் சிருட்டம் மானசாரம் வத்துவித்தியாபதி, பாரசாரியம், அரிடிகம், சயித்தகம் வாத்துபோதம் விச்சாரம் இந்திரம், வச்சரம், சௌமம், விச்சுவகசிமம், மகத்திரம், விசாலம் சித்திரம், காசிபகாலயூபம், காமசங்கிதை, சாத்திகம் விச்சுவபேதம் ஆதிசாரம் வெகுச்சுருதம் மானபேதம் முதலிய பல நூல்களிலுஞ் சொல்லியிருக்கிறது மேலும் இந்த சித்துசிருஷ்டிக்கும் பிஞ்சி உலகமில்லையென்றும் அதுவே பஞ்சகர்த்தாக்கள அவதார சொருபமென்றும் யசர்வேதத்திற் சொல்லியிருக்கிறது.

மனுப்பிரம்மணே உமாஹேஸ்வராப்யாம்நம:
மயப்பிரமணே லட்சுமிநாராயணாப்யாம்நம:
துவஷ்டப்பிரம்மணேவாணிஹிரண்ணியகர்ப்பாப்யாம்நம:
சில்பிப்பிரம்மணே சசிபுரந்தாப்யாம்நம.
விஸ்வஞ்ஞபிரம்மணே ஸவிதபாஸ்காப்யாம்நம

మనుబ్రహ్మణేఉమామహేశ్వరాభ్యాంనమ
మయబ్రహ్మణేలక్ష్మీనారాయణాభ్యాంనమః
త్వష్టబ్రహ్మణేవాణిహిరణ్యగర్భాభ్యాంనమః
శిల్పిబ్రహ్మణేశచీపురందరాభ్యాంనమః
విశ్వజ్ఞబ్రహ్మణేసవితాభాస్కరాభ్యాంనమః

என்றும் வேதவாக்கியத்தின் பொருள் மனுப்பிரம்மாவுடைய சிருஷ்டியே உமாமகேஸ்வராகிய ருத்திரன்தொழிலென்றும்,

மயப்பிரமாவினுடைய சிருஷ்டியே லட்சுமிநாராயணஸ்வரூபமாகிய விஷ்ணுதொழிலென்றும்,

துவஷ்டபிரம்மாவுடைய சிருஷ்டியே வாணிஹிரண்ணியகர்பனாகிய பிரம்மாவினுடைய தொழிலென்றும்,

சிலபிர்ம்மாவினுடைய சிருஷ்டியே சசிபுரந்தரனாகிய தேவேந்திரன்தொழிலென்றும்,

விஸ்வஞ்ஞபிரம்மாவுடைய சிருஷ்டியே சவிதாபாஸ்கரனாகிய சூரியன் தொழிலென்றும்,

விராட்விஸ்வ கர்மணேநம
ஸ்விராட்விஸ்வ கர்மணேநம.
ஸமாராட்விஸ்வ கர்மணேநம,

அதர்வத்துக்கோட்டுதீர்ப்பு.

విరాట్విశ్వకర్మ్మణే
స్వరాట్ విశ్వకర్మ్మణే
సంమ్రాట్విశ్వకర్మ్మణే

என்றும் விராட்பிரம்மமே விஸ்வப்ரம்மா ஸ்வரூபமென்றும் ஸ்வராட்பிரம்மமே விஸ்வப்பிரம்மா ஸ்வரூபமென்றும் சம்மராட்பிரம்மமே விஸ்வபிரம்மா ஸ்வரூபமென்றும் பிரம்மமென்பதும் பிரம்ம கர்மமென்பதும்

(கசு) ப-கு க்ஷத்திரியருடைய வித்தியாவதென்ன

மா-ஆ க்ஷத்திரியர்களில் சூரியவம்சம் சந்திரவம்சம் அக்கினி வம்சமுதலான அநேக க்ஷத்திரியர் ஐம்பத்தாறுதேசமுதலான தீவுகளில் அரசாளுகின்றவர்கள் முடி கொடைமுதலிய தசாங்கத்துடனே வேதமோதுதலும் யாகஞ்செய்தலும் இரப்பவர்க்கீதலும் ஆயுதவித்தயிற்பழகுதலும் பகைவரை யழித்தலும் ஆகிய ஷட்கர்மமுடையவராய் வீரமுள்ள சேனைகளும் செல்வமுள்ள குடிகளும் மாறாத பொருள்களும் நுண்ணறிவுள்ள மந்திரியும் அன்புள்ள நட்பும் பகைவராமல் அழிக்கப்படாத கோட்டைகளும் பதினெண்வகை வழக்குகளை மனுநீதியின்படி தீர்க்கின்றவர்களே க்ஷத்திரியர்கள்.

(கஎ) ப-கு வைசியர்கள் மார்க்கமென்ன

மா-ஆ வைசியர்களின் மார்க்கமாவது தாரகதீக்ஷையும் தர்மதானகுணமும் உபகாரகுணமும் தேவ பக்தியும் காரியசித்தியும் சத்தியவாக்கு நித்தியாசாரமும் புத்தியுக்தியும் வேதவித்தையும் பெற்றவர்களே வைசியராகவெண்ணப்படும்.

(கஅ) ப-கு-சூத்திரர்களுடைய வித்தியாவதென்ன,

மா-ஆ சூத்திரர்களுடைய வித்தியாவது ஆதியில் விஸ்வபிரம்ம வம்சத்தார் இந்தப் பூசக்கரத்தை குறிஞ்சி பாலை முல்லைநெய்தல் மருதமென்னும் பஞ்சநிலமாக பகுத்தளித்ததில் இன்னகாலத்தில் இன்னபொருள் விளையுமென்றும் அதனை இன்னவிதமாய் பயிரிடவேண்டுமென்றும் கற்பித்தபடியே உயிர்களைக் காப்பாற்றுவது சூத்திரன் பெருமையானதால் அந்த சூத்திரன் தேவர்கள் முதலாகிய பிதிர்கள் யாவருக்கும் திருப்தியைத்தரிய உணவுகளைத் தருபவன் வேதாகமங்களுணர்ந்த விதி வழுவாதவனே சூத்திரனென்றுசொல்லப்படும்

(ககூ) ப-கு-பிரமசாரிவித்தியாவதென்ன.

மா-ஆ-குருபக்தியில் தொண்டுபூண்டிருப்பதும் வேதம்வாசித்தலும் நிலைதவறாமலிருத்தலும் நித்திய ஸ்நான விரதமும் உத்தமரோ

சமும் தேவலாயதரிசன பணிவிடைகளும் செய்துவருகிறவர்களும் பெற்றிரு ப்பவன் இந்திய பிரமசாரி.

ப - கு - இந்தபிரமசாரிக்குப் பதவியென்ன,

மா - ஆ - சாலோகபதவி.

ப - கு - சாலோகபதவியாவதென்ன.

மா - ஆ - விராட்டுவிஸ்வபிரம் நம்உலகத்தில்வாழ்வதேசாலோகபதவி.

உய. ப - கு கிரகஸ்தன் விதியாவதென்ன

மா - ஆ - தருமமாகத் தேடியபொருளை பிரம்மசாரி முதலிய ப தின்மருக்கும் பிரித்துக்கொடுத்து தேவாலயபணிவிடை இருவிதஞ்செய்து வேதவிதிவழுவாது விராகோன்பியற்றி அசத்தியம்மாறாய் ஆசாரியனைவாழ்த்தி சொல்தவறாதவருடன்கூடி வாழ்வது இல்ல தர்மமாம்.

ப - கு - இந்தகிரகஸ்தனுக்குப பதவியென்ன

மா - ஆ சாமீபமென்னபபட்ட பதவி

ப - கு - சாமீபமென்பதென்ன

மா - ஆ - விராட்டுவிஸ்வபிரம்மத்தின் அருகில்வாழ்வது சாமீபதவியாம்.

(உக) ப - கு - வானபபிரஸ்தன் விதியாவதென்ன

மா - ஆ - கறபுடையமனைவியுடனுவது தனித்தாவது மேபுலன் அவாவில உழலாமல நன்வசத்துக்குரிய விரதமுதலியதவம் புரிந்துவபு ததிருந்த இருப்பதுதான் வானபபிரஸ்தன்விதி,

ப - கு - இவர்களுக்குப்பதவியென்ன.

மா - ஆ - சாரூபமென்பது,

ப - கு - சாரூபபதவியாவதென்ன.

மா - ஆ - விராட்டு விஸ்வபிரம்ம போல ரூபித்திருப்பது சாரூபபதவியாம,

(உஉ) ப - கு - சந்நியாசிவிதியாவதென்ன,

மா - ஆ - பிரணவவேத விதிவழுவாமல் தத்துவபேதாபேதங் ்றிந்து இருவினை மும்மலம அகற்றி பாசபந்தத்தோட்க அறுத்துக் காமமானம் வெறுத்துப் பறறசசுநக சைதன்னிய பதமானதே நியாசி விதியாம்.

ப - கு - இவர்களுக்குப பதவியென்ன,

மா - ஆ - சாயுச்யபதவியாம.

ப - கு - சாயுச்யபதவியாவதென்ன

மா - ஆ - ஆ, குண்டையனே ஞானமில்லை நீயுமில்லை நானுமிருந்து பந்தமுமில்லை ஞானஞாதுருவிருக்கும் சாயுச்சியம் அந்தசாயுச்சிய மாவது விராட்டுவிஸ்வப்பிரமத்தில் ஐக்கியமாம்.

## சிவ சிருஷ்டி.

(உக) ப - கு - ஆண்பெண் உற்பத்தி பேதமாவதென்ன

மா - ஆ - ஆண்பெண் உற்பத்திபேதமாவது மாதவிடாய் ஆன பின்பு ௬ - அ - ௰ - கஉ - கச - கசு - இவ்விரட்டித்த நாள்களில் கற்பகதரித்தால் ஆணாகவும் ஐந்துமுதல ஒற்றைப்பட்ட நாள்களில தரிப்பது பெண்ணாகவும் உற்பவமாம் இதன்றியில் இடகலைபாயுமாகில் பெண் பிங்கலைபாயுமாகில்ஆண் சுழிமுனைசொக்குமாகில் அலி அல்லது ஆணியம மேலும்புணர்ந்தவுடன் இடதுபாகம் படுப்பாளாகில்பெ ண்வலதுபக்கம்படுப்பாளாகில ஆண் மல்லாந்துபடும்பாளாகில் இர ட்டைபிள்ளைகள அல்லது பூர்ச்சியமென்று மநுஸ்மிருதியிற சொல்லு கின்றது.

(உச) ப - கு - விஸ்வப்பிரமத்தின் நிலையாவதென்ன,

மா - ஆ - அளவிடப்படாத சமுத்திரத்தினிடத்து அலைநுரை திவலை குமிழிகளைத்தோன்றச்செய்து மறுபடியும் அந்தச்சமுத்திரத் தில்தானே யொடுக்கிக்கொளவதெவ்வாறோ அவ்வாறே அண்டபுவனச ராசரங்களையும் படைத்து மாயாசொரூபதேக ஆன்மகோடிகள்காலம் ஈசுவறென்று நடந்துகொண்டிருக்கும் உணர்வே விராட்டுவிஸ்வப்பிரம்ம நிலை யென்னப்படும்,

## வியாசர் உற்பத்தி.

உ௫ ப - கு ஓ - மார்க்கசகாய ஆசாரி வியாசோ நாராயணோ ஹரி என்னும வாசகப்பிரகாரம் நாராயணனே ஞானகுருசாமியாகி ய வியாசபகவானாய் அவதரித்து நான்கு வேதங்களைச் சிக்கறுத்துப் பதினெண்புராணங்களை உபயனஞ்செய்தன னென்பது மெய்மையல்லவோ.

மா - ஆ - பஞ்சாங்கங்குண்டையனே உமக்குறியகுலகுருவாகிய அந்த வேதவியாசரில் உற்பவம் அறிந்ததில்லையோ அதை நான் சுருதிப் பிரமாணமாக அறிவிக்கின்றேன் அஃதாவது ஊர்வசியென்னும் தாசி வயிற்றில் பிறந்தவன் வசிஷ்டமுநி வசிஷ்டமுநிக்கும் சக்கிலிச்சிக்கும பிறந்தவன் சத்திமுனி சத்திமுனிக்கும் புலைச்சிக்கும்பிறந்தவன் பராசர்முனி பாராசரமுநிக்கும் மீன்வாணிச்சிக்கும் பிறந்தவன் வியாசமுநி இந்தவியாசமுநிவர் அக்கியானத்தைக் கியானமாகவும் கியானத்தை அக்கியானமாகவும் அமுர்தத்தைவிஷமாகவும் விஷத்தை அமிர்தமா கவும் செய்யத்தக்க தந்திர இந்திர ஜாலமுடையவன் அந்த வியாசன் ஆதியில் விஸ்வப்பிரம்மகுலத்தாரை அடுத்து வேதாகமபுராணங்களைப்

ந்தவியாசன், அக்கிரகத்தில் இருந்த ஆசாரியர்களை, ஜ்ஞானவித்தையினின்று விலகி மாற்றி தன்வசப்படுத்த தந்திரிப்பதற்கு சதுர் யுகங்களிலும் தானே யிருந்து வர்ணாச்சிரமதர்மங்களை வகுத்த மஹா ரிஷியென்று போற்றி வணங்கி வாழ்த்தும்படி செய்துகொண்டு ஆதியாயிருந்த மனு, மய, துவஷ்ட, சில்ப்பி, விஸ்வக்கிய என்னும் இவ்வைந்து பிரம்மாக்களையும் மாற்றிப்போட வேணுமென்று தாங்களே மகாரிஷிகளாயிருந்து காலகதியானவைகளைச் சொல்லுங்காரியஸ்தாரிக்கொண்டு கலங்காவுலகத்தைக் கலக்கிவிட்டார்களையும் உண்டாக்கினனென்றுஞ் சொல்லியிருக்கின்றது

மேற்சொன்ன லிங்கபுராணத்தில் மற்றொருபக்கத்தில் பிரம்மா சிருஷ்டிகிரியை முடிக்கச் சக்தியில்லாமல் கண்ணீர் விட்டழுதாரென்றும் அந்தக் கண்ணீர்களில் ருத்திரன் தோன்றி அந்த சிருஷ்டிகிரியை தானும் முடிக்கக்கூடாமல் வருந்துவதை அவன் தகப்பனாகிய பிரம்மா கண்டு அவனுக்குத் துணைசெய்ததாகவுஞ் சொல்லியிருக்கின்றது.

மார்க்கண்டபுராணத்தில் லட்சுமியிலிருந்து விஷ்ணுவும் காளியிலிருந்து சிவனும் சரஸ்வதியிலிருந்து பிரம்மாவும் தோன்றினார்களென்றுஞ் சொல்லியிருக்கின்றது.

வராகபுராணத்தில் திரிமூர்த்திகளிலிருந்து சக்திதோன்றி அந்த சக்தியிலிருந்து லட்சுமி காளி சரஸ்வதி மூன்றுபேருமாக ளென்றும இப்படி பலவிதமாகச்சொல்லிய பலபுராணங்களில் எதைமெய்யென்று சொல்லக்கூடும் இவ்விதமாறுபாடுகள் அனேகம்வியாசன்முதலான ரிஷிகள் தங்கள் புராணங்களிற் கற்பனைசெய்திருக்கிறபடியால் இதை மெய்யென்று நம்புகிறவர்களைப் பேதைகளென்றே சொல்லப்படும்,

பாகவதம்.

சாவியாபிகபகவான் தஸ்மாத்ஸர்வகதசிவஹா
సర్వవ్యాపీశభగవాన్ తస్మాత్సర్వగతశ్శివః

இதற்கருத்து அந்தபகவானென்னப்பட்ட சிவன் சர்வ வியாபியாகி எவ்விடத்திலும நிறைந்திருக்கின்றான் என்பதுபாகவதத்தில் இதற்குமுழுவிரோதமா யிருக்கின்ற சுலோகத்தைக்கேளும்,

பவவிரததரூயேசா ஏசதாம்சமனோவிரத:
பாஷாண்டினதேவபந்து சஸ்சாஸ்திர பரிபந்தன.
முமூக்ஷவோகோரருபாநதவ பூதபதிரந்தா
நாராயணகளாசாதாந்தா பஜந்தினிசூயவ:

భవవ్రతధరాయేచాయేచతాంసమనోవ్రతః
పాషాండినఃతేభవంతుసచ్ఛాస్త్రపరిబంధనః.
ముముక్షవేఘోరరూపాన్ హిత్వాభూతపతీర్నధాః
నారాయణకళాశ్శాంతాభజంతిహ్యనసూయవః

யபூரண தன்மைக்கும் பின்னதும் ஆகிறதல்லவே ஏனென்றால் ஒருசா ஸ்திரம் நிர்க்குணமென்றும் மற்றொருசாஸ்திரம் முக்குணமென்றும் சொன்னால் மகாபேதமல்லவா ஆகையால் இதையோசித்தால் தெரியலாம்.

மச்சபுராணம் இந்த ஆதிமூர்த்திக்குரிய திரிகுணாத்துமாவின் உற்பத்திகாரணங்களைக்குறித்துச் சொல்லியிருக்கிறசுலோகங்களை உமக்கு விரிக்கவேண்டுமாகில் அவைகள்அனேகமாயிருப்பதால் மற்றப்புராணங்களில் இருக்கிறவழுக்களிற் சிலதைமாத்திரம் இங்கேசுருக்கிக் காட்டுவேன் அவைகளில் ஒருபுராணத்திலே ஆதிசக்தியினின்று இந்தத்திரிமூர்த்திகள் தோன்றினார்களென்றும் அந்த ஆதிசக்தி இவர்களைமோகித்துத் தனக்கே யிவர்களைப்புருஷர்களாகப் பாவித்துக் கொண்டாளென்றும் பாகவதத்திலும் இன்னுஞ்சிலபுராணங்களிலும் விஷ்ணுவினுடைய நாபியிலே ஒருதாமரைதோன்றி அதிலிருந்துபிர்மாஉற்பதியானாரென்றும் சொல்லப்பட்டிருக்கிறதுஅது எப்படியென்றால் ஆதியிலே பிரஹாமூர்த்தித் தண்ணீரை சிருஷ்டித்துத் தன்னுடையவித்தை அந்தத்தண்ணீரில்விட்டார் அது முட்டையாகி மிதந்தது அந்தமுட்டையில் முக்கண்ணனாகிய சிவன்தோன்றி உடைத்தான் அந்தணமே குறைவில்லாதபஞ்சபூதங்களும் உண்டாயினவாம்.

மற்றொருபுராணத்திலே ஆதிசக்தியிலிருந்து ஒரு வித்துஉண்டாகி அதிலிருந்து சிவன்தோன்றினானென்றும் மச்சபுராணத்திலே பிர்மாவிலிருந்து சிவன்தோன்றினானென்றும்இன்னம் இப்படிப்பலவிதஞ்சொல்லியிருப்பதால் எதுமெய்எதுபொய்யென்பதை யார்கிரகிக்கக்கூடும்இதினால்சகலமும்பொய்யென்றே தெளிவாய்விளங்குகின்றது

சுலோகம்.

ததோசிருஜத்வாமதேவம் திரிபுண்டரவதாரிணம்

இதன கருத்தாவது பிரம்மம்திரிபுண்டாதாரியென்கிற வாமதேவனை உண்டாக்கினானென்பதே.

நாரதபுராணத்தில் நாராயணனுடைய வலதுபக்கத்திலிருந்து பிரம்மா தோன்றினானென்றும்இடதுபக்கத்திலிருந்து விஷ்ணுதோன்றி

றுமென்றும் நடுவிலிருந்து சிவன்தோன்றினுனென்றும்சொல்லியிருக்கின்றது.

இலிங்கபுராணத்தில் இவ்வுலகஅண்டத்திலிருந்து சிவனுனவன் ரூபீகரித்துப் பிறகு தனது இடதுபக்கத்தி லிருந்து விஷ்ணுலக்ஷுமியென்பவர்களையும் தனது வலதுபக்கத்திலிருந்துபிரம்மா சரஸ்வதியென்பவர்.

# தேவர்களுற்பத்தி

(உசு) ப - கு - ஓமார்க்கசஹாயஆசாரி எமதுவியாசபகவான்திரிமூர்த்திகளையு மெந்தப்புராணத்தி லிகழ்ந்திருக்கின்றார்.

மா - ஆ - ஒ - பஞ்சாங்கங்குண்டையனேசிவபுராணத்தில்

ஆதிசக்திமயம்பீஜம் பீசஜக்திமயம்சிவா
சிவசக்திமயம்விஷ்ணு சர்வவிஷ்ணுமயம்ஜகத்

இதன்கருத்து ஆதிசத்தியினிடத்திலிருந்து ஒருபீஜம் பிறந்தது அதனுடைய வல்லமையினாலே சிவன்பிறந்தான் சிவனிடத்திலே விஷ்ணுபிறந்தான் அந்தவிஷ்ணுமயம் சர்வலோகமுழுதுமென்றிருப்பதினால் சிவன்விஷ்ணுவுக்கு தகப்பனல்லவோ.

மமயோனிர் மஹத்பிரம்மதஸ்மின்கர்ப்பேததாம்யஹம்

இதன்கருத்து என்யோனில் மஹாபிரமம் அதிலிருந்து நான் உருவாக்கிவிடுகிறேனென்பதாம்.

மச்சபுராணம்.

குணேபியக்ஷோபிய மாணேபிய திரயோதேவாபீஜக்ஙீரே
ஏகமூர்த்திதிரயோபாகா பிரம்மாவிஷ்ணுமஹேஸ்வரா.

இதன்கருத்து ராஜஸ-தாமஸ- சாத்வீகருணங்களினால் ஆதிமூர்த்தியியும் அந்த ஏகமூர்த்திகளும் தோன்றியதென்பது,

கேளும் ப - குண்டையனே இவ்விரண்டுசாஸ்திரங்களில் ஒன்றில் ஏகமூர்த்தியானவர் ஆதியிலே யாதொருகுணமும் இல்லாமல் ஏக

மாயிருந்தாலொன்றும் மற்றொருசாஸ்திரத்திலே முக்குணங்களுள்ளவனாலென்றுஞ் சொல்லியிருப்பதினாலே அநேக ஆக்ஷேபனைகளுக்கிடமாயிருக்கின்றதே அஃதெப்படியென்பீரோ இந்தமூர்த்தி ஒருகுணமில்லாதவனென்றால் அவருடைய பரத்துவமகத்துவத்திற்குக் குறைவும் அவருடைப்புகழ்ந்துபேசியிருக்கின்றது பதுமபுராணத்தில் சிவனை இகழ்ந்திருக்கின்றது,

விஷ்ணுதர்சனமாத்திரேண சிவத்துரோகபிரஜாயதே
சிவத்துரோஹநசாதேஹோ நாகம்யாந்த்திதாருணம்
தஸ்மாத்விஷ்ணுநாமாபி நவகத்தவியம்கதாச்சந.

இதன்கருத்து சிவத்துரோகஞ்செய்து விஷ்ணுவைதரிசித்தால் சிவன் உக்கிரங்கொண்டு நரகத்துக்குள்ளாக்குவான் ஆதலால் விஷ்ணுவினுடையபெயரை உச்சரிக்கலாகாதென்பதாம்,

இதிலே சிவனைப்புகழ்ந்தும்விஷ்ணுவைஇகழ்ந்தும்இருக்கின்றதல்லவா மேற்படி புராணத்தில நிந்தையாகிய தந்திரவித்தை சுலோகத்தைக்கேளும்,

யஸ்துநாராயணம்தேவம் பிரம்ஹருத்ராதிதேவத்தா
சமமந்வைர்நிரோக்ஷேதர் ஸபாஷாண்டிபவேத்பதா
திரிமந்திரபகுமோக்தேந பிரம்ஹணய்யேப்யவைஷ்ணவா
நஸ்பஷ்ல்வியாநவக்தவியா நதிருஷ்டவியாகதாசன

இதன்கருத்து எவனொருவன் பிர்மா உருத்திரனுக்கு நாராயணனைச் சமமென்று சொல்லுகின்றானோ அவன் என்றைக்கும்பதிதபாஷாண்டனவானென்றும் லட்சுமி மந்திரஞ்செபிக்கின்றவிஷ்ணுபக்தாளாகியவேதியர்களை தூஷிக்காமல் பிரமக்கியானமுள்ளவரொன்றுபோற்றிவாழ்த்திப் பணியவேண்டியது கேட்டீரோ பஞ்சாங்கங்குண்டையரே சிவனைநீக்கி விஷ்ணுவைப்போற்றிப் புகழவேண்டுமென்றும் விஷ்ணுவை நீக்கி சிவனை துதிக்கவேண்டுமென்றும் விஷ்ணுபக்தனைக் கண்ணாலேபார்க்கவும் தொடவும்படாதென்றும் பேசவுங்கூடாதென்றும் அவரவர்களுக்கேற்றபடி புராணங்களைக்கற்பித்த உங்கள்முன்னோர்களின் புத்தியீனத்தை [illegible]

அதூலத்துக்கோட்டுகிரப்பு.

அக்யுதேவம்பரிதவேநா வதந்தியக்ஞானமோஹிதா
நாராயணஜகந்நாதா தேவபாஷண்டிநஸ்மிருதா

இதன்கருத்து ஜகநாதனுயிருக்கிற நாராயணனைப் பார்க்கிலும் முக்கியமாயிருக்கிற அந்நியதெய்வமும் உண்டென்று சொல்லுகிறவர்கள் அறிவீனரும் வஞ்சகரும் பதிதபாஷாண்டரும் பாவிகளுமாவார்கள்

ஈமேதவோமஹாதேவோ விஜ்ஞேயஸ்துமஹேஸ்வர
நதப்மாத்ஸர மஞ்சித்பதம் சம்திகம்யதே,

இதன்கருத்து மஹேஸ்வரனுக்கு மேலானவஸ்து ஒன்று மில்லையென்பதாம் இதிலே சிவனை புகழ்ந்திருக்கின்றது.

வாசுதேவம்பரித்தியஜ்ஞ யோன்னியதேவமுபாசதே
தருஷிதோஜாந்ஹவிதிரே கூபங்குநந்திதுர்மதி

இதன்கருத்து வாசுதேவனென்னப்பட்ட விஷ்ணுவை விட்டுவிட்டு அந்நியதேவனை வணங்குகிறவன் தாகமடைந்த மதியீனனுமவன் அவன் கங்கைநதியின் கரையில உட்காந்துகிணத்தைவெட்டுகிறவனுக்குச் சமானமாக எண்ணப்படுவானெனபதாம் இதிலேவிஷ்ணுவை புகழ்ந்திருக்கின்றது,

இவ்விதமாகவே உங்கள் புராணங்களெல்லாம் சிவனை புகழ்ந்தும்விஷ்ணுவைப் புகழ்ந்தும் இருப்பதால் ஒன்றுக்கொன்று ஒவ்வாமல மாறுபாடாயிருப்பதென்பதற்கு மேற்சொல்லிய சில திருஷ்டாந்தமே போதுமென்றெண்ணுகிறேன்,

ஆனால் பாகவதமுதலிய புராணங்களில் விஷ்ணுவின்நாபிகமலத்தில் பிரமா உற்பத்தியானனென்றும் வேறு சிலநூல்களிலஆதிசத்திஉண்டாகிய ஒருவிதத்தில் விஷ்ணுவின் பிதாவாகிய சிவன் உற்பத்தியானனென்றும் மச்சபுராணத்தில் ருத்திரன்பிரமாவால் சிருஷ்டிக்கபட்டானென்றும் நாரதீய புராணத்தில் நாராயணனுடைய வலதுபு

ரதத்தில் பிரம்மாவும் இடப்புறத்தில் விஷ்ணுவும் மத்தியத்தில் சிவனுந்தோன்றினார்களென்றும் லிங்கபுராணத்தில் பிரமாண்டத்திலே ருத்திரன் ரூபிகரமாய்த்தோன்றி தனது இடதுபுறத்தில விஷ்ணுவையும் இலக்குமியையும் தனது வலப்புர்த்தில் பரமாவையும் சரஸ்வதியையும்தோன்றப்பண்ணினானென்றும் ஷை புராணத்திற்றானே வேறொருயிடத்திலே பிரமா தனது சிருஷ்டிகீர்த்தியும் மந்தப்பட்டதின் நிமித்தியப்விட்ட பெருமூச்சிலே பிறந்த ருத்திரன் அந்தத்தொழிலை நடப்பித்தும் அதுமீளவும் மந்தப்பட்டது கண்டு பிரமா அந்தத்தொழிலை மீண்டு தானேநடப்பித்தானென்றும் மார்க்கண்டேய புராணத்தில் மகாலக்குமியிலிருந்து பிரமாவும் மகாகாளியிலிருந்து ருத்திரனும் மகாசரஸ்வதியிலிருந்து விஷ்ணுவும் தோன்றினார்களென்றும் வராக புராணத்தில் பிரமா விஷ்ணு ருத்திரனென்ற மூவர்களிலும் ஒரு சக்தியுண்டாகி மூன்று பகுதிபட்டு லட்சுமி சரஸ்வதிகாளியென்பவர்களுண்டானார்களென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது மெய்யல்லவோ,

ஆமென்றாற்கேளுங் குண்டையரே பாகவதம் மார்க்கண்டேயர் புராணம் வராகபுராணம் நாரதியபுராணம் லிங்கபுராணமுதலான்புராணங்களிலுள்ள பேதாபேதமான கட்டுக்கதை புராணங்களை யெல்லாம் பொய்யென்று உமக்கு மற்றவர்களுக்கும் விசதமாய் விளங்குகிறதற்கு யாதொரு சந்தேக மில்லையல்லவா.



## திரிமூர்த்திமுதலான தேவர்கள்

## நடபடிக்கை.



(உஎ) தத்தாத்திரி மெய்ச்சகத்தில் அத்திரிமகாமுனியினுடையஸ்திரீ அநசூயையென்பவளை கற்பழிக்க திரிமூர்த்திகள் பிராமணவேடமாகவந்து அவளை பிச்சைகேட்டதாயும் அவள் பிச்சையிடவந்தபோது இவர்கள் அந்த பிச்சைவேண்டாமென்று நிர்வாணத்தோடேவந்து

னின்றால் அதுவே யெங்களுக்கு இச்சையானபிச்சையென்று சொன்னார்களென்றும் அந்த அநசூயையு மிகவும்வெட்கி இவர்களைக் குழந்தைகளாகச் சபித்தாளென்றும் அப்போது நாரதமகாமுனி அந்தஅநசூயையை மிகவும் வேண்டிக்கொண்டு சாபதநைத் தீர்த்துத் திரிமூர்த்திகளைப் போகச்சொன்னாளென்றும்,

இந்த திரிமூர்த்திகள் பிருகுரிஷி பெண்சாதி நாகவல்லியை கற்பழிக்க எத்தனித்ததால் அவள் திரிமூர்த்திகளை குழந்தைகளாகச் சபித்து உருட்டிப்புரட்டி ஓர்மூலையில் தள்ளிவிட்டாளென்றும்,

ஆதியில் தேவர்களுக்கு அமுதளிக்க மோகினிரூபமெடுத்தவிஷ்ணுவை சிவன்கண்டு விரகங்கொண்டுமோகிக்க அரிஹரபுத்திரன் ஐயனார் பிறந்தாரென்றும்,

தாருகாவனத்து ரிஷிபத்தினிகளை கற்பழிக்க சிவன் புருடரூபமும் விஷ்ணு ஸ்திரீரூபமுமாகி ரிஷிகள் தபசைக்கெடுத்து ரிஷிபத்தினிகளின் கற்பையழிக்க இருவரில் ரிஷிசாபத்தால் சிவனுடைய சிசினமற்றுப்போயிற்றென்றும்.

கண்டகியென்னும் வேசியின்பேரிலே சொல்லியிருக்கிற

சுலோகமாவது,

வேசியாதரிசனம்புண்யம் பரிசனம்பாபநாசனம
சுமபநம்சர்வதீர்த்தாணும் மைதுனம்மோக்ஷசாதனம்.

இதன்கருத்தாவது வேசிகளை தரிசிக்கிறது புண்ணியம் அவர்களைத்தொடுகிறது பாபவிமோசனம் அதரபானஞ்செய்கிறதாவது சகலதீர்த்தத்துக்குஞ் சமானம் மைதுனம்பண்ணுகிறதே மோக்ஷத்தை அடையலாமென்மபதாம் ஓய்பஞ்சாங்கக்குண்டையனே •இவ்விதஅசுத்தமானவார்த்தைகளை ஜெபிக்கும்படி சிலரை செய்கிறீரல்லவா,

## தேவேந்திரன் நடபடிக்கை.

(உஅ) தேவேந்திரன்கௌதமரிஷிபெண்சாதி அகலிகையைக்கற்பழித்தானென்றும் கௌதமர் தேவேந்திரன் சினமற்றிடவும் அவன் தேகம் ஆயிரங்கண்ணாகவும்அகலிகையை கல்லாகவும்சபித்தாரென்றும் பின்புதேவர்கள் ஆட்டின்சினத்தை அறுத்துவெட்டிவைத்தார்களென்றும் அதினால் இந்திரனுக்கு மேஷாண்டனென்கிற பெயருண்டாயிற்றென்றுசொல்லி இருக்கின்றதல்லவா,

அகலிகை தேவேந்திரனோடு விபசாரஞ்செய்தாளென்றும் துரௌபதி பஞ்சபாண்டவாளுக்கு பாரியாயிருந்துகர்ணனையும்இச்சித்தாளென்றும் சீதையை ராவணன் எடுத்துக்கோண்டுபோனஅபகீர்த்தியும்பிரகஸ்பதிபெண்சாதியான தாரை சந்திரனைச்சேர்ந்தாளென்றும் வண்டோதரி ராவணன்பெண்சாதியென்றும்இப்படியாக கற்பழிந்த இவ்வைந்துஸ்திரீகளையும் பஞ்சகன்னிகைகளென்று அந்திசந்தியி லிவர்களை ஜெபித்துவரும்படிசெய்த தந்திரம் பாமராளுக்குத் தெரியாமற்போனாலும் பண்டிதாளுக்குதெரியாதா.

அகலியாதுரோபதிசீதா தாராமண்டோதரீஸ்திருனுதா
பஞ்சகந்யாஸ்மரேநித்தியம் மஹாபாதகநாசனம்.

இதன்கருத்தாவது, அகலிகை துரோபதை சீதை தாரை வண்டோதரி இந்தஐந்துஸ்திரீகளையும் நித்தியகாலமும் ஸ்துதித்துவருகிறவர்களுக்குசகலபாவங்களும்விமோசனமாகிவிடுமென்பதாம் இவர்களால் இகபரசாதகமடைவார்களா.

---

## பிர்மாவின் நடபடிக்கை.

(உக) பிரம்மாவானவர் தான்சிருஷ்டித்த ஊர்வசியையிச்சித்துகலைமான்ரூபமெடுத்து காட்டிற்சம்போகஞ்செய்தகுற்றத்திற்கு பிரம்மாவின் ஐந்துசிரசில் ஒருசிரசை ஈஸ்வரன் துண்டித்தாரென்றும் அந்தசி

ஈசுநான் குருநாதனுக திரிகின்றதென்றும் அதுதான் மிருகசீரிடமென்றும் பிரம்மா திலோத்தமையை சிருஷ்டித்து அவள்ரூபத்தைக்கண்டு மோகித்தபோது அவள் தேவேந்திரன் கோட்டையிற் புகுந்திட-காவற்காரர் கோட்டைக்கதவைசாத்த அந்தகதவிலே பிரம்மாவுடைய விந்துஸ்கலிதமாகிவிழஅதில் அகஸ்தியன் பிறந்தானென்றும்.



## சுப்பிரமணியர் உற்பத்தி,

(௯௰) சிவன் சப்தரிஷிகளுடைய பெண்டுகளை கற்பழித்ததிலஅருந்ததிதவிர மற்ற ஆறுபேர்சிவனுக்குப்பெற்ற பிள்ளைகளை தங்கள் புருடருக்குப்பயந்து சிவனையே யிட்டுக்கொண்டுபோகச் சொன்னார்களென்றுஞ் சிவன்இட்டுவந்ததை உமாமஹேஸ்வரிநோக்கி இந்தப்பிள்ளைகள ஆரென்றுகேட்க உன்மக்களென்றுசொல்ல உமையவள் ஆறுபிள்ளைகளையும் அன்புடனே சேர்த்தெடுக்க அந்த ஆறுபிள்ளைகள் உடலுங்காலும் ஒன்றாய்பொருந்தி தலையுங்கையும் பொருந்தாததனால் ஆறுமுகமென்றுசொல்லப்பட்டிருக்கின்றது.



## கிருஷ்ணன் நடபடிக்கை.

(௯௧) ஆயர்பாடியில் அசோதையென்பவள் கிருஷ்ணனை வளர்த்தாளென்றும் அவன் பத்துவயதிற்றானே பால தயிர் வெண்ணெ திருடினதைக்கண்டு மாடுமேய்க்கக் காட்டில் துரத்திவிட்டாளென்றும்.

அவன் மாடுகளை மலையடிவாரத்தில் மேய்க்கையில் காளிங்கனென்கிற சர்ப்பம் காளிந்தி நதிக்கரையில் நாககன்னிகைகளை வைத்துக்கொண்டிருந்தது அதைக்கொன்று இந்தக் கன்னிகைகளின் க[illegible]டையழித்தபின்பு கலியாணஞ்செய்து கொண்டானென்றும்.

கிருஷ்ணன் தன்மாமன் கம்சனுடைய மந்திரிமார்பெண்கள்ஒன்பதுபேர் குளத்திலே ஸ்நானம்பண்ணும்போது அவாளுடைய வஸ்திரத்தையெடுத்து புன்னைமரத்தில் கட்டிவைத்துக்கொண்டதை அவாள்கேட்க தன்னிஷ்டப்படி நடந்தபின் கொடுத்தானென்றும்.

கிருஷ்ணன் ஆயர்பாடியில் பதினுயிரம் ஸ்திரீகள் தங்கள் புருடர்களே தங்களை அனுபவிக்கிறார்களென் றெண்ணும்படி மாய லீலைகள்செய்தானென்றும்.

கிருஷ்ணன் துரியோதனனிடத்தில் தூதுபோனபோது விதுரன்வில்லையொடித்து குந்தியம்மாளுக்குக் கர்ணன் முதற்பிள்ளையென்றும் துரியோதனனுக்கு அசுவத்தாமாபேரில் சந்தேகம்வரும்படிசெய்தானென்றும்,

• கிருஷ்ணன் ஒரு வேடன் அம்பினுலிறந்து ஆற்றங்கரையில் தகனஞ் செய்யப்பட்டபோது வெள்ள மடித்துக்கொண்டுபோன மூண்டசொருபத்தை ஜெகந்நாதத்தில் வணங்குகிறார்களென்றும் சொல்லியிருக்கின்றது.

(௩௨) விஷ்ணு பத்தவதாரமெடுத்த சுலோகம்,

மஸ்ச: கூர்மவராகஸ்ச்சு நாரஸிம்மஸ்ச்சவாமநஹ
ராமோராமச்சராமச்ச பௌத்தகல்க்கியேவசா,

మత్స్యః కూర్మో వరాహశ్చ నారసింహశ్చ వామనః।
రామో రామశ్చ రామశ్చ బౌద్ధః కల్కిరేవచ॥

விஷ்ணு பத்தவதாரத்தில் மச்சவதாரம் வேதத்தை யெடுத்துக்கொண்டுபோன சோமுகாசுரனைவென்று வேதத்தைக் கொண்டுவந்தாரென்றும்,

கூர்மவதாரமெடுத்து அமுர்தங் கடையும்போது தான்மோகினி அவதாரமாய் அரக்கரை மோசஞ்செய்தபோது சிவன அந்தமோகினியைக்கண்டு மோகித்ததினுல் ஜன்னவதேவன் வைரவதேவனும் பிறந்தார்களென்றும்,

வராக அவதாரத்தில் கனகாக்ஷனென்கிற அரசன் பூமியை பாயாய்சுருட்டி பாதாளத்திற் கொண்டுபோனபோது அவனை யழித்து பூமியை மேலாகக் கொண்டுவந்தாரென்றும்,

நரசிங்க அவதாரத்தில் இரணியனை யழித்து பிரகலாதனை ரட்சித்தாரென்றும்.

வாமன அவதாரத்தில் மாபலி சக்கிரவர்த்தியை மூன்றடி மண் கேட்டு அவன் சிரசின்மீதில் தன்பாதத்தைவைத்து பாதாளத்திலழுந்தச்செய்தாரென்றும்,

பரசுராம அவதாரத்தில் க்ஷத்திரியரான ஜெமதக்னிமுதலானவாளைக்கொன்று தன்னைப்பெற்ற ரேணுகையையும் சகோதரர்களையுஞ் சம்கரித்தானென்றும்.

இராமாவதாரத்தில் ராவணனைக்கொன்று சீதையைசிறையொழித்தானென்றும்.

பலராம அவதாரத்தில் கலப்பை ஆயுதத்தால் அரக்கரை அழித்தாரென்றும,

பௌத்தவதாரத்தில் காசியில் சைவசமயத்தை விட்டு பௌத்த சமயத்தையுடைய மூன் காசியையாண்டிருந்த திவோதனனை நீக்கி சிவனையாளும்படிசெய்து பூலோகத்தை யுண்டாக்கின கடவுளு மிலலை சிருஷ்டிகர்த்தாவுமில்லை யென்று போதித்தானென்றும்

இனி கலிக்கி அவதாரம் எடுக்கப்போறானென்றும் பதினெண்புராணங்களில வியாசன் முதலானவாள்செய்த கட்டுக்கதைகள ஒருவிதமல்ல பலவிதமாகையால் அதுகளை ஆதியோடந்தமாய் பதினெண் புராணங்களில் பார்வையிட்டால் யாவருக்கும் நன்றாய்தெரியலாம்.



## காந்தக்கற்கோட்டை,

ப-கு-ஆ-மாற்கசஹாய ஆசாரி வியாசபகவான் காந்தக்கற்கோட்டையை அழித்தகாரணமென்ன,

மா-ஆ-மாந்தையென் றொருபட்டணத்தில் காந்தகற்கோட்டையொன்று கட்டிககொண்டு அதில விஸ்வப்பிரம்ம வம்மிசத்தார் ஐம்பத்தாறு தேசததரசர்களுக்கும் பஞ்சகிருத்தியத்தினால் அவாளவாளுக்கு வேண்டியதை சம்ரட்சணை செய்துவருங்காளில்.

வியாசனென்பவன் பாததுலஹரி ராஜனுக்கும் விஸ்வப்ரம்மவம்மிசத்தாருக்கும் மித்திரபேதஞ்செய்து காந்தகற் கோட்டையை பிடிக்கும்படிசெய்தான்.

# சித்தூர் ஜில்லா.

பர்த்துலஹரிராஜன் சதுரங்கஜதுரக பதாதிகளுடன் வந்து யுத்தஞ்செய்வதைக்கண்டு விஸ்வப்ரம்ம வம்மிசத்தார் பகற்காலத்தில் சூரியர்காந்தத்தைக் காட்டியும் இராக்காலத்தில் சந்திரகாந்தத்தைக் காட்டியும் வந்த சதுரங்கஜதுரகபதாதிகளை அநேகநியாக்குவதைக்கண்டு அரசன் துயரப்படும்போது வியாசன் ஸ்ரீஷைலத்தால் அந்த கற்கோட்டையைப் பிடிக்கவேணுமென்று சில வியாபாரிகளை ஆடையர்பாண அலங்கிரதர்களாய அந்தக்கோட்டைக்கருகில வாசம்பண்ணும்படியாயும் கோட்டையின மர்மத்தை யறியும்படியாயும் விஸ்வப்ரம்ம வம்மிசத்தாரை தங்கள் கைவசப்படுத்தி வரும்படி செய்தான்.

அதிலொருநாயகி தன்னருகில் நித்திரைசெய்யும் நாயகனையெழுப்பி கோட்டைபறறிக்கொண்டதென்று கூக்குரலிட்டாள் புருஷன்திடுக்கிட்டு விநாசகாலே விபரீதபுத்தியென்கிற சுலோகப்படிக்கு வாகுவைக்கோலைப்போட்டு கொளுத்திவிட்டார்களோ வென்றசந்தேகத்துடனே யெழுந்திருக்க அந்த நாயகி தன்னெண்ணம் கைவல்லிய மாச்சுதென்று நகைத்து உமது நித்திரையினுடைய மிருதுவைப்பார்க்க பரியாசஞ்செய்தேனென்று உடனு முயிரும்போலஆலிங்கனஞ்செய்துகொண்டாள் அந்த நாயகன் நமதுகோட்டைக்கு நாசகாலம்வந்துசம்பவித்ததென்று யோசித்துக்கொண்டு பிராதகாலத்தில் கோட்டைக்குட்சென்று அங்குள்ளபெரியவாளை நமஸ்கரித்து நமதுகோட்டைபறறிக்கொள்ளக கனவுகண்டேனென்றான.

அந்தப்பெரியவாள காலேக்கியான முதலானசாஸ்திரங்களை ஆராய்ந்து கேட்டபோதிற காரணம் இன்னதென் றறிந்து கனவுகண்டேனென்று வந்துசொன்ன துன்மார்க்கனை நீங்கள் பாஸ்திரீகனை நேசித்து நமதுகோட்டைக்குத் தீங்குவரும்படி செய்தீர்கள் உங்களுககு இன்றுமுதலாக சுவர்ணஉற்பத்தி சூதகிரமுதலானதும் விருத்தியீனமாய் போகககடவதென்று சபித்து அவனையும் அவர்களுடன் நேசித்தவர்கள அதற்குச் சம்மதித்தவர்கள் எண்ணங்கொண்டவர்கள் முதலானவர்கள் யாவரையும் பிதுர்ககள் சகோதரர்கள் புத்திரர்கள் முதலியவர்களோடு குடும்பசமேதராய் அவ்விடத்தில்தானேவிட்டு அதற்கருகே சிறுவென் றொருபட்டணமுண்டுபண்ணி அதிற் சத்துருக்கள் பிரவேசிக்கவொட்டாமல் விசாலமாக மதிற்சுவர் நிருமித்து குடும்பசமேதராய அதிற்போய்ச் சேர்ந்தார்கள்.

பர்த்துலஹரிராசன் வாகு வைக்கோலைக்கொண்டுவந்து கோட்டையைச்சுற்றிப் போட்டுக்கொளுத்தக் கோட்டை குழைந்துபோன

ன்தைக்கண்டு அதற்குளிருந்தவர்கள் குடும்பசமேதராய்ச் சாங்கத்தின் வழியாய்க் காட்டில்வந்துபார்த்து லஹரிராசன் பட்டணமுழுதும் அழிந்துபோகும்படி ஆபத்திற்காதாரமாகிய அதர்வணவேதத்தில் விளங்காநின்ற மாரணபீஜாக்ஷரத்தை யுச்சரித்து அவன்பட்டணமுழுதும் பாழாகச்செய்தார்கள்.

அந்தக் காந்தகநற்கோட்டை யழிந்தபின்பு வேதசாஸ்திரமரியாதைகளெல்லாம் நசிச்சது வர்ணாச்சிரதர்மங்களும் யாகாதிகர்மங்களுந் முழுகிப்போச்சுது ஸ்திரீகளுடைய பதிவிரதாதருமங்களும் பாழாபபோசசுது சத்தியம்பறந்தது அசததியம்நிறைநதது இயம நியமாகளும மைத்திரியாதிகளும் சமதமாதிகளும் ஆத்துமவிசாரணை துபநளும் அழிந்தது மாதமுமமாரிபொழிவது மறைநதது தேவலோகம் பூலோகமும்கலங்கி பெரியோர்களுடைய சித்தம் பம்பரம்போசுழன்று லோகமெல்லாம தோஷகர்மங்கள் வர்தநிச்சுது வேதசாஸ்ரபுராணாதி சிரவணங்களும் இல்லாமல் தானதர்மம பட்சாநுதாபம ரக்ஷமுதலான நறகுணங்களிலலாமற புலைகொலை களவுகள் காமமுலான துற்குணமுடையவர்களானார்கள.

வில்வப்பிரம்ம வம்மிசத்தார் தங்களுடைய சுவயரூபங்களை மாறிக்கொண்டு அந்தந்த தேசசாரபபடி வேஷங்களைப் போட்டுக்கொண்டு அறிவுடையோர்களும் அறிந்துகொள்வதற் கருமையாகவும் மாபடிந்த மாணிக்கமபோலவும் நீறுபூத்த நெருப்புப்போலவும தர்மராசாமுதலான பஞ்சபாண்டவர்கள் அக்கியாதவாசஞ் செய்தபோது எப்படி உருமறைந்திருந்தார்களோ அப்படி உருமறைந்து பெருமையும் ஒழுக்கமும் இயற்கையும் மறைந்துக்கொண்டு ஐம்பத்தாறு தேசங்கள்முதலான பலதீவுகளினும் அந்தந்த தேசபாஷையும் அந்தந்த தேசாசாரமும் உடையவராய் உலகசம்ரக்ஷணை செய்துக்கொண்டு வருகிறார்கள்.

## தரணிமகாராசன்.

ப-கு-ஓ மார்க்கசகாய ஆச்சாரி தரணிமகாராஜனுக்கும் வில்வப்பிரம்ம வம்மிசத்தாருக்கும் நடந்தவிசேஷமென்ன.

மா-ஆ-ஐம்பத்தாறு தேசத்தரசர்கள் முதலானவர்களுக்கு வில்வப்பிரம்ம வம்சம் பஞ்சகிருத்தியத்தால் நிர்மித்த சாமான்களை தேசசெட்டிகள்மூலமாய் வியாபாரஞ்செய்து வரும்போளி

## சித்தூர் ஜில்லா.

வயரசன் தாணிமகாராசனை விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாரிடத்தில் தீர்வைகேட்கும்படி யித்திரபோதஞ்செய்தான் விஸ்வப்பிரம்ம வம்மிசத்தார் இந்த ஐம்பத்தாறுதேசத் தாசர்களுக்கும் நாங்கள் தீர்வை கொடுக்கிறதில்லையென்றார்கள்.

அரசன் நீங்கள் தீர்வைகொடாதிருக்கிறது என்னகாரணமென்றான் இந்த ஐம்பத்தாறு தேசத் தாசர்களும் விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாராலே பஞ்சகிர்த்தியமும் நடத்திக்கொள்ளுகிறபடியால் அந்தபஞ்சகிர்த்தியத்தால் அரசர்கள் அரசாளுவதினாலும் அந்தந்தராஜசபையில் ஆசாரிபீடமாயிருந்து மனுநீதிவழுவாமல் அரசுசெலுத்தவும் காலக்கியானப்படி திரிகாலவர்த்தமானங்களும் சொல்லுகிறபடியால் எங்களிடத்தில் தீர்வைவாங்க நீதியில்லை ஆகையால் தாங்கள் நூதனமாய் தீர்வைகேட்கிறது மனுநீதிக்கு விரோதமென்று சொன்னார்கள் அரசன் அவாளையும் அவாளுடைய சாமான்களையும் சிறைச்சாலையில் வைத்தான்.



### தேசாயி பெத்தண்ணராஜுகாரு,

தாணிமகாராசன் விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாரையும் அவாளுடைய பஞ்சகிர்த்திய சாமான்களையும் சிறைச்சாலையில வைத்ததை கேள்விப்பட்ட தேசாதிபதிகளில் பெத்தண்ணராஜுகாரு தங்களுடைய ரதகஜதுரக பதாதிமுதலான சேனைகளுடன்வந்து தாணிமகாராசன் சேனைகளை எதிர்த்து யுத்தஞ்செய்யும்போது க்குமுங்கிட்டு திடுக்கிட்டோடுவதை தாணிமகாராஜன்கண்டு உக்கிரங்கொண்டு சிறைச்சாலையிலிருக்கும் துவஷ்டாசாரியை நீங்கள் தீர்வை கொடாவிட்டால் உங்களை சிரசசேதஞ்செய்வேனென்றான் அதற்குதுவஷ்டாசாரி எங்களை சிரசசேதஞ்செய்தால் உன்சிரசு அநேகெதிக்குஆளாகுமென்றுசொல்ல அரசன் தன்கையிலிருந்த உடைவாளால் துவஷ்டாசாரிசிரசைத் துண்டித்தான்.

அந்தசிரமானது கஞ்சபிஞ்சக்கு சங்கம் லேடுதன்றுகாமாட்சியம்மைபாதத்தில்முறையிட அந்தகாமாக்ஷியம்மை மாகாளிரூபமாய் உக்கிரங்கொண்டு தாணிமகாராசன் குடலைப்பிடுங்கி அருகில் வாழ்த்துநின்ற தேசாதிசெட்டிகழுத்தில் மலாரமென்று மாலையாய்ப்போட்டு அந்தஅரசன்தோலையுரித்துக் கம்பிளியாகக் கொடுத்து விஸ்வப்பிரம்ம

வம்மிசத்தாரைநோக்கி உங்களிருவரும் உன்னைதியானித்துவந்தால் உங்களிஷ்டசித்தி நிறைவேறுமென்று அனுக்கிரகஞ்செய்தாள்.

அந்தக்குட்டல்தான் தேசாதிசெட்டிகழுத்தில் மலாரமென்று வளையல்கோர்த்து மாலையாய்விளங்குகின்றது அந்த அரசன் கர்மமானது கம்பிளியாகவும் அந்தக்கம்பிளி சந்துருவின்தோலாகையால் நாளையும் தேசாதிசெட்டிகள் தங்களிடதுகால் பெருவிரலால் எடுப்பார்களேயொழிய வலதுகால்பெருவிரலினுலாவது அல்லது கையினுலாவது கீழேயிருக்கிற கம்பளியை எடுக்கிறதில்லையென்று யாவருக்கும் னன்றாய்த் தெரியுமல்லவா.



## காளிங்கராஜன்,

(௩௬) ப-கு, ஓய் மார்க்கசகாயஆசாரி உங்களை இடங்கையென்றும் மற்ற ஜாதிகளெல்லாம் வலங்கை யென்றுஞ் சொல்லவேண்டிய காரணமென்ன.

மா-ஆ, பரிமளச்சோழனென்னும் அரசனிடத்தில் வியாசன் தாங்கள்வம்மிசத்தாரை அரசர்சபையில் ஆசாரிபீடமாய்வைத்தால் காலக்கியானப்படி திரிகால வர்த்தமானங்களும் சொல்லுவார்களென்றான் அரசன் திரிகாலவர்த்தமானங்களும் பஞ்ச கிருத்தியங்களும் அறிந்திருக்கிற விஸ்வப்பிரம்ம வம்மிசம் இருக்குதென்று வியாசனை அனுப்பிவிட்டார்.

அந்தவியாசன் மேற்சொல்லிய பரிமளச்சோழன் பாகதியடைந்தபின்பு அவர்சகோதரன் பண்புரிச் சோழனுக்குப் பட்டமாகி அரசு செலுத்தும் நாளில் தன்னினத்தை ஆசாரி பீடமாய் வைக்க யெத்தனித்தான்.

பண்புரிச்சோழன் விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாராலே பஞ்ச கிருத்தியமும் நடப்பதினுல் உலகசம்ரக்ஷணை நடந்து வருகின்றது அப்படிக்கிருக்க ஜோகிசங்கமரைப்போல் யாசகஞ்செய்யும் விராம பார்சகாளாகிய உங்களினத்தை ஆசாரிபீடமாய்வைப்பது உங்கத்தாருக்குயாதொரு பிரயோசனமுமில்லை.

ஆதியில் விஸ்வப்பிரம்மவம்மிசத்தாரை குருதனமடுத்து வேதாகமங்களைக்கற்று அவாளாலே மந்திரஉபதேசங்களைப்பெற்று அவாளுக்

குதுரோகஞ்செய்ய நினைக்கிறபடியால்உங்களைத்தான் குருத்துரோகியென்றுசொல்லும்படியென்றனுப்பிவிட்டார்.

இந்தவியாசன் பரிமளச்சோழனுக்குப் பிறந்த வைப்பாட்டி குமாரன் காளிங்கனுக்கும் பண்புரிச்சோழனுக்கும் செய்த மித்திரபேதமாவது இந்தபட்டம் நியாயமாய் உன்தகப்பன் உனக்குக்கட்டவேண்டியது அப்படியிருக்க தன்சகோதரனுகிய பண்புரிச்சோழனுக்குப் பட்டங்கட்டினன் ஆனல் நம்முடைய தமயன் நமக்குப்பட்டங்கட்டினபடியால் நாம் காளிங்கனுககு இளவரசுபட்டங் கட்டவேண்டுமெனறெண்ணுமல் தன்பிள்ளை பாலனைச் சோழனுக்குப்பட்டங்கட்டயோசித்தான் நான் காளிங்கராசனுக்குபட்டங் கட்டவேண்டியது உன்பிள்ளைக்குக்கட்டுவது மனுநீதியல்லவென்றேன.

உன்சிறியதகப்பன் விஸவப்ரம்ம வம்மிசத்தில் ஆசாரிபீடமாயிருக்கிறவனுடன் நான் உனக்கு இளவரசுபட்டங்கட்டசசொல்லுகிறேனென்றார்

அதறக்கவன் விபசாரிபிள்ளைக்கு இளவரசுபட்டங்கட்டச்சொன்னுரே இவர்தான் பிரம்மரிஷியென்றேளிதஞ்செய்தான்.

ஆகையால் அந்தப்பட்டம் உனக்கு வருகிறவாரத்துக்குள்யான் கட்டுவதற்கு யாதொரு சந்தேகமில்லை ஆனல் இந்தக்கம்மாளன உன்னை வைப்பாட்டி பிள்ளையென்று இழிவாய் சொன்னபடியால் இந்தக்கம்மாளரை இவ்வுலகமிகழும்படி நான்செய்வதறகு யாதொருசந்தேகமில்லையென்றான்,

கல்வியறிவில்லாத காளிங்கன் இந்ததுன்மார்க்கனுன வியாசனை நோக்கி எனக்கே ராஜபட்டாபிஷேகம் ஆகத்தக்க தந்திரஞ்செய்வாயாகில் அப்போது இந்தகம்மாளரைச் சபையைவிட்டு நீக்கி நமதுமாபில் உற்பத்தியான ரிஷிகளை ஆசாரிபீடமாக வைத்துக்கொள்வதறகு யாதொருதடையிருதென்றான்.

வியாசனுனவன் பண்புரிச்சோழன் வேட்டையாடப் போகும்போது நீயுங்கூடப்போய் தருணம்பார்த்து தனித்திருக்குங்காலததில ஓரேவெட்டாய் வெட்டிப்போட்டுவந்தால் அப்போது நானேமுன்னின்று உனக்குப் பட்டங்கட்டிவைப்பேனென்றான் காளிங்கன் யாகன்சொற்படி பண்புரிசசோழன் வேட்டையாடப்போய் சேனைகளைவிடுத் தனியாய் அரசன்தாகசாந்திசெய்யத் தடாகத்தைக்கொண்டுதா

க்கார்த்திசெய்யும்போது காளிங்கன் அரசனை ஒரேவெட்டாய் வெட்டிக் குளத்தில் தள்ளிவிட்டுச் சேனைகளிடம்வந்து அரசனைப் புலியடித்துக் கொன்றுவிட்டதென்று ஓலமிட்டழுதான் சேனைகள்மெய்யென்றுநம்பி மிகவுந்துயரமாக பட்டணம்வந்து சேர்ந்தார்கள்.

வியாசன் பண்புரிச்சோழன் இறந்ததைக்கேட்டு காட்டிலிருந்த தன்வம்மிசத்தாராகிய ரிஷிக்கூட்டங்களை நாட்டில்வரவழைத்து மங்களவாத்தியமுழங்கக் காளிங்கனுக்கு ராஜபட்டங்கட்டிவைத்தான்,

காளிங்கன் அரசாளும்நாளில் வியாசனுக்குச்சொன்ன வாக்குத் தப்பாமல் விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாரை இன்றுமுதல் பஞ்சகிர்த்தியமாத்திரம் நீங்கள் செய்யவேண்டியது பஞ்சாங்கம் புரோகிதம் சுபசோபனம் அபரவிஷயகர்மாதிகள் தேவாலயபூசைமுதலானதும் எங்கள்ரிஷிகளைக்கொண்டே நாங்கள்செய்துகொள்வோமென்றான்.

விஸ்வப்பிரம்ம வம்மிசத்தார்நாங்கள்செய்யும் பஞ்சகிர்த்தியமும் அந்தரியர்களைக்கொண்டே தாங்கள்செய்துகொள்ளலாமென்றார்கள்.

உழுதுபயிரிடும் உழவர்முதலான தொழிலாளிகள் ஒருவாரம்வரையில் பஞ்சகிர்த்தியம் நடவாதிருந்ததினால் சீவனஞ்செய்வதற்கில்லாமல் மிகவும் வருத்தப்படும்போது வியாசனென்பவன் குடிகளை தன்வசப்படுத்தி அரசனைச்சார்ந்தவர்களெல்லாம் வலங்கையென்றும்விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாரை இடங்கையென்றும் ஏற்படுத்தி விஸ்வப்பிரம்ம வம்மிசத்தார்வீட்டில் இராநின்ற வேதாகமங்களைக் கொள்ளையிடுவதுங் கொலைசெய்வதுமானார்கள்.



## தேசாதிபதி ஜெயவீரராஜுகாரு.

(௩௭) அக்காலத்தில் அடுத்ததேசத்தில் அரசுசெலுத்தும் தேசாதிபதியாகிய செயவீரராசுகாரு தன்சேனையுடன் வந்து கொள்ளையடிக்கும் துன்மார்க்கரைக் கண்டதுண்டமாய்வெட்டிராசபட்டங்கட்டிக்கொண்ட காளிங்கனென்னுங் கயவனைக் கைப்பிடியாய்ப் பிடித்து நீ அந்தத்துன்மார்க்கனான வியாசனுடைய [illegible] தகப்பனைக் கொலைசெய்தாய் இரண்டாவது விஸ்வப்பிரம்ம வம்மிசத்தார்செய்யும் பஞ்சகிருத்தியத்தால் சகல உயிரும் உயிர்வாழ்வதும் நன்றாய்த் தெரியும் அப்படியிருக்க நீயெப்படி அவர்களை நீக்கி ஜோதிசங்கமர்களான வியாசன்முதலானவர்களை ஆசாரிபீடமாய் வைத்துக்கொள்ளலாம் அப்படி

வைத்துக்கொண்டபடியால் அந்த துன்மார்க்கனை வியாசன் விஸ்வ ப்பிரம்ம வம்மிசத்தாரை இடங்கைபென்றும் மற்ற சகல்சாதிகளும்வ லங்கையென்றும்பிரித்து விஸ்வப்பிரம்ம வம்மிசத்தார்வீட்டில்கொள் ளையிடவும் கொலைசெய்யவு மானீர்கள்.

இந்ததுன்மார்க்கனை வியாசன் சொற்படிநடந்த உன்னைக் கண் டிக்கவேண்டியது ராசநீதி அந்தராசநீதி நான் உனக்குச்செய்யவே ண்டிய கடமையென்று காளிங்கனைத் தன்வாளால்வெட்டிவியாசன்மு தலானவானைத் தேடும்போது வியாசன் முதலானவாள் விஸ்வப்பிரம் ம வம்மிசத்தார்வீட்டில் அகப்பட்டவரையில் வேதாகமசாஸ்திரங்க ளைசுற்றிக்கொண்டு தலைமறைவாய் ஓடிப்போய்விட்டார்கள்.

மேற்சொல்லிய பண்புரிச்சோழன்குமாரன் பாலனைச்சோழனுக் கு மங்களவாத்தியமுழங்க ராஜபட்டங்கட்டி முன்போலவே விஸ்வ ப்பிரம்மவம்மிசத்தை ஆசாரிபீடமாய்வைத்து மனுநீதிவழுவாமல் அ ரசுசெலுந்தும்படி ஜெயவீராசன்செய்து தான் பட்டணம்போய்ச சேர்ந்தான்.

விஸ்வப்பிரம்ம வம்மிசத்தார் மனுநீதிவழுவாமல் வேதசாஸ்திர விதிகளும் வர்ணாச்சிரமங்களும்நடத்திவருவதினால்ஆஸ்திகாளென்று ம் விப்பிராள் மாறுபாடாய் நடக்கிறபடியினாலே நாஸ்திகாளென்றும் சாஸ்திரசித்தாந்தமானபடியினால் விப்பிராளுக்கு துன்மார்க்காள் உத வியால் விஸ்வப்பிரம்மவம்மிசத்தாரை வஞ்சித்தபடியால உலகத்திலே வேதசாஸ்திரவிதிகளும் யாகாதிகர்மங்களும் இயமம் நியமாதி ஆசார ங்களும்சமதமாதி சற்குணங்களும் மைத்திரியாதி சுகுணங்களும்தீர் த்தஸ்தலமான விரத உபவாசாதிதர்மங்களும் நஷ்டப்படுத்திப்போ ட்டபடியினாலே லோகததில் அவாளவாளிஷ்டப்படி வர்ணாசிரதர்ம மில்லாமல் வேதாகமங்கள் சூத்திராள் வாசிக்கக்கூடாதென்று விபபி ராள்சொன்னதை மெய்யென்றுநம்பினார்கள்.



## வியாசன்மித்திரபேதஞ்செய்தது.

(௧அ) விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாருக்கும் அரசர்கள் முதலான வாளுக்கும் உள்ள ஒருமையை வியாசன்கண்டு தன்மரபில்வந்த விப் பிரர்களும் விப்ரரிஷிகளும் மேன்மையடையும்படி எண்ணியும்முடியா

ழல் கடைசியில் அவர்களுக்கு வசியம், பேதனம். மோகனம், தம்பன ம், ஆகருஷணம், உச்சாடனம், வித்துவேஷணம், மாரணம், என்னும் அஷ்டகர்மங்களில் வசியமாவது ஸ்திரீ புருஷர்களையாவது அரசனையா வது விலங்குமுதலிய பிராணிகளையாவது மந்திரசித்தனையால் வசிகர ம்படுத்துகையாம் பேதனம் இருவருக்கும்ஊடாகயிருக்கும் சிநேகத் தை இயந்திரங்களாற் பிரித்தலாம் மோகனம் மந்திரவலிமையால் ப யங்கச்செய்தலாம் தம்பனம் மந்திரஜெபத்தினால் ஆணைசெய்துத்த டுத்தலாம் ஆக்ருஷணம் மந்திரோச்சாரணையினால் அழைத்தலாம் உச் ச்சாடனம் தேவதையை உருவேற்றலாம் வித்துவேஷணம் மந்திரவலி யால்படைவெல்லுகையாம் மாரணம் யந்திரயேந்திரமூலமாகயில்லீது னியமியறிக் கொலைபுரிதலாம் இவைகளால் ஒருவர்க்கொருவரொரு மையில்லாமல் விரோதப்படும்படி சாஸ்திரபுராண கற்பனை களாலும் கலகமேசெய்துவிட்டான்.

## வியாசன் கரமற்றது.

(௩௯) இந்தவியாசன் உடலுமுயிருமாயிருந்த விஸ்வம்பிரம்மவ ம்மிசத்தாருக்கும் மற்ற அரசர்கள் முதலானவாளுக்குங்கலகஞசெய் துவிட்டுத் தான்தலைமறைவாய் ஓடுவதைதக்காசியில் பிரம்மரிஷிகள் க ண்டு ஆதியில் அண்டபுவன சராசரங்களையும்படைத்த பஞ்சமுக சா மராட் விஸ்வப்பிரம்மாவாலே யாவரும் இகபரசாதனமடையும்படிஅ ளித்த ஐந்துவேதத்தை நான்கு வேதமென்றும் பஞ்சமுகப்பிரம்மா வை நான்முகப் பிரம்மாவென்றும் பஞ்சமூர்த்திகளை திருமூர்த்திக ளென்றும் ஜாதிபேதஞ் சமையபேதமில்லாதிருந்ததை பலஜாதியெ ன்றும் பலசமயமென்றும் ஒருவர்க்கொருவர் ஒருமையில்லாமல் பதி னெண்புராணக் கட்டுக்கதைகளைச்செய்துஇவ்வுலகத்தைக் கெடுத்தா யே இதனால் உனக்கு இகபரசாதக முண்டாவென்று இகழ்ந்தார்கள்.

வியாசன் பிரம்மரிஷிகளைநோக்கி என்விதி அனுகூலமான கா லத்தில் யான்செய்தபதினெண்புராணம் பயன்படும்பிரதிகூலமானகா லத்தில் இகழப்படும் ஆகையால்இந்தநாட்டில் அவமானப்படுவதைவி ட இதி வனவாசத்தைப்பார்க்கிலும் சுகமில்லையென்றான்.

பிரம்மரிஷிகள் நீர்பேசுவதிற் சமர்த்தரென் றெங்களுக்கு தெ ரியும் வேதாகமபுராணங்கள் விராட்டு விஸ்வப்பிரம்மமே பரத்துவம ன்றி மற்றொருபரத்துவமில்லையென்றுசொல்லியிருக்க அதைமறைத்

துமனம்போனபடி துன்மார்க்கத்தால் பலவிதமாய் உளறியிருக்கிற படியால் எவ்விதத்திலும் நீ துன்பத்துகளாவாயென்பதற்கு யாதொருசந்தேகமில்லை ஆனால் சாதுக்கள் எங்கே போனாலும் மரியாதைகிடைக்கும் நீயோவென்றால் திரிபுரங்களை யெரித்த தீயைப்போலவும் அநேகவிதமான அவிஷதங்களாலேயும் தீராக்கொடிய ரோகம்போலவும் திரிமூர்த்தி முதலான தேவர்களை தூஷித்தபழிபானதுநாள்தோறும் வளர்ந்துவருவதற்கு யாதொருசந்தேகமில்லை உம்முடைய சாமபேத தானதண்டமென்று மாதுர்வித உபாயத்தால் விஸ்வப்பிரம்மவம்மிசத்தாரை ஒருவரும் மதியாமல் உங்கள்வம்மிசத்தை மதிக்கும்படி நீசெய்த மந்திர எந்திரமானது ஒருக்காலும் பயன்படமாட்டாது.

ஒருவேளை இவ்வுலகத்தின மாயையற்று தேவரீர் காட்டுக்குப் போனாலும் அவ்விடத்தில்வாசமாயிராநின்ற வேடர் வில்லியர் கள்ளர் மறவர் குறவர் இருளர் முதலானவாள் உங்க ளினங்க ளாகையால் அவ்விடத்திலும் பேதாபேதங்களை ஏற்படுத்தி ஒருவர்க்கொருவர் மிததிரபேதஞ்செய்தால் பிராணசங்கடம் நேரிடும் ஆகையால் தாங்கள் பாரதமுதலான பதினெண்புராண கட்டுக்கதைகள் செய்த பண்டிதராகையால் தங்களுக்குத்தெரியாத ஆலோசனை நாங்களென்னசொல்லப்போகிறேம்.

அந்தப் பிரம்மா சபையில் விளங்காநின்ற ஒரு வீரமுஷ்டியானவர் எழுந்து ஐயா வியாசபகவானே எனக்கு மற்றொன்றும் தாங்கள் போதிக்கவேண்டியதில்லை திரிமூர்த்திகளில் எந்தமூர்த்தியை நான்தியானிக்கவேண்டுமென்றான்.

வியாசன் ஸ்ரீ விஷ்ணுவே தெய்வமன்றி மற்றொருதெய்வமில்லையென்றான்.

வீரமுஷ்டி விஷ்ணுவே தெய்வமென்றீர் மற்றொரு தெய்வமில்லையென்றீர் அப்படியிருக்க நீங்களெப்படி அந்த விஷ்ணுவைகூட பற்பலவிதமாய் உமது பதினெண் புராணங்களில் தூஷித்த காரணமென்ன,

வியாசன் அந்த வீரமுஷ்டியைநோக்கி வலதுகாத்தை ஆகாயத்தில்தூக்கி அந்த விஷ்ணுவே தெய்வமென்று சத்தியமாய்ச் சொன்னேனென்றான் அந்த வீரமுஷ்டி நீ சத்தியமாய்ச் சொல்லியிருந்தால் அந்த விஷ்ணுவை நீயேன் தூஷித்தாயென்று தன் காற்றிற் பற்றிய

ருந்த உடைவாளால் வியாசன் வலதுகரத்தை மணிக்கட்டுவரையிற் கண்டித்தான் அந்த வலதுகரந்தான் வீரமுடிகளின் விருதுக் கொடிகள் அடையாளமாக விளங்குகின்றது

## கலியுகாதி அதர்மம்.

(௩௰) ப - கு - ஓமார்க்கசஹாய ஆசாரி எங்கள் முன்னோர்கள் பூதபவிஷ்யத் வர்த்தமானங்களைப்பற்றி முன்னமே எழுதியிருக்கிறார்களந்த உண்மை கமலாலயபுராணத்தில் சதுர்த்தாகிய சூத்திரர் கலியுகத்திலே வேதமோதி வேதபோதகராவார்கள் வைசியர்கள்வேதநூல்களின்விதிப்படி நடவாமல் அதிகலாபஞ்சம்பாதிக்கப் பொருளாசை கொண்டு திரிவார்கள்,

க்ஷத்திரியரும் வேதமுதலிய நூல்நெறிவழுவி நொடுந்நிறைவாங்குவார்கள் தயாளசிந்தை யுடையோராய் உலகத்தை யரசாளமாட்டார்கள் குருவை சிஷன்பகைப்பான் அரசனை அமைச்சர்கள் விரோதிப்பார்கள் அடிமை எஜமானுடனே கடுஞ்சொற்பேசி பகைசாதிப்பான் மனைவி தன் கணவனை வெறுப்பாள் குலத்திற்பிறந்த பெண்ணும்பிள்ளைகளும் மாதா பிதாவின் சொற்கேளார்கள் சூத்திரர் பிராமணர்முதலிய மேற்குலத்தோருக்கு எழுந்து தண்டஞ்செய்யாதிருப்பார்கள் இராஜ அதிகாரம்பெற்று அரசாட்சி செய்வார்கள் சிலர் சிவமுத்திரையைத் தரித்துக்கொண்டு பிர்ம்மாவையும் விஷ்ணுவையும் நிந்தனைசெய்வார்கள் சிலர் விஷ்ணுமுத்திரையைத் தரித்துக்கொண்டு சிவனைதூஷிப்பார்கள்சிலர்அருகசமயிகளாகிவேத விதிகளை அப்பென்றிகழ்ச்சி செய்வார்கள் மேகம் அரிதாகமழைபெய்யும் பூமி விளைவு குன்றிப்போம் குறைவாகவிளையும் நீசஜாதியார் முறைமை தவறி மற்றவர்களுக்குத் துன்பமேசெய்வார்கள்.

மா - ஆ - ஓ - பஞ்சாங்கம் குண்டையனே கலியுகத்தில நடக்கப்போகிற அதர்மங்களைப்பற்றித் தெரிபலானேன் ஆறு விதற்கு முன் மூன்றுயுக தர்மத்தையும் விளம்பும்படி கோருகின்றேன்,

## திரேதாயுக தர்மம்,

(௩௧) ப - கு - ஓ மார்க்கசஹாயஆசாரி திரேதாயுகத்திலேயுள்ளவர்கள் ஆசையுங்கேடு மற்றவர்கள் சிவபூசை வேதவொழுக்கம்இவைகளில் வழுவார்கள் மோக்ஷத்தையே நாடுவார்களே யன்றி நரகத்தை

நாடுவீதில்லை ஸ்திரீ மலடியாவதில்லை அவள்பெற்றபிள்ளைமரணத்தை
க்காண்பதில்லை வயோதிகத்தில் மரண மடைவதன்றி மத்தியில் மரிப்
பதில்லை மாதமும்மாரிபெய்து செல்வம் விருத்தியாகும் பூமியிலெங்
கும் தரித்திரரில்லை அரசர்கள் ஆறிலொன்று கடமைவாங்கி குடிகளை
ரட்சிப்பார்கள் போர்த்தொழில் புரிவதில்லை ஒருவரும் தண்டனைய
டைவதில்லை நால்வகை வருணத்தாரும் தங்கள் குலாச்சாரம் தழுவா
மல் நடப்பார்கள் கலியுகத்தில் தர்மமில்லாமையாலும் பகைசாதித்த
ல்முதலிய விரோதமுண்டாமென்று எங்கள் முன்னோர்கள் சொல்லி
யபடி நீங்கள் புராணவிதிகளை விலக்கி வேதவிதிப்படிவிவாகஞ்செய்ய
எத்தனித்து உங்களிலேயே வாத்திமார்களை நியமகஞ்செய்து இருக்
கிறீர்கள் இந்த உண்மைக் கென்னசொல்லுகிறாய்,

---

## யுகதர்ம வித்தியாசம்.

(சஉ) மா - ஆ: ஓ குண்டையனே இதுகளை உண்மையென்று
சொல்வதெப்படி. உங்கள் சீவன் விர்த்திக்காக உங்கள் முன்னோர்கள்
கற்பித்த கட்டுக்கதைகளேயல்லாமல் வேறல்ல அது எப்படியென்று
ல் பாரதங் கலியுகத்திற் பாடியதாயிருக்க மேலிடுங்கலிகாலமேயென்
றுவிசேஷிப்பதென்ன பாரதத்திற்குக் காரணரா யிருந்தவர்களும் அ
ந்தயுத்தத்தை நடாத்தின கிருஷ்ணனுமே புன்மை நிகழ்த்தும் வஞ்ச
நெஞ்சராயிருக்க கலியுகத்தார் அப்படிப் பட்டவர்களாய் இருப்பார்க
ளென்பது என்ன விபரீதம் கௌதமன்முதலிய ரிஷிகள் தவநெறியி
ற்பிறந்ததில்லையா பராசர் வலைமகளைப்புணர்ந்ததும் வீமன் இடும்பி
யை மணந்ததும் கிருஷ்ணன் கோபிகாஸ்திரீகளை வரைவின்றிப் புணர்
ந்ததும் ஜாதிவரம்பழிந்து நீதி தவறியதல்லவா சந்திரன் தனது குரு
பத்தினியைக் கவர்ந்ததும் இந்திரன் கௌதமரிஷிபத்தினியைக் கூடி
னதும் நீதிதவறல்லவா-விஷ்ணு பலகாலஞ்செய்த மித்திரபேதங்களு
ம் சூரன் ராவணன் துரியோதனன் முதலியோர் தேவருக்கும் மனித
ருக்கும் செய்த அநியாயங்களெல்லாம் வஞ்சகமல்லவா அகலிகையும்
ஏழைப் பாஞ்சாலிகளும் அவர்களுடனே போகம்பண்ணின தூர்த்தர்க
ளும் ஸ்திரீபுருஷர்கள் கற்புநெறி தவறினவர்களல்லவா விஷ்ணு பக்
தனாகவும் வியாசராகவும் காசிபராகவும் அவதரித்து சமயபேதங்க
ளியற்றினது வேதவிரோதமல்லவா சூத்திரரும் வேதத்தை கற்பார்க
ளென்பது அதிசயமா இருக்கு வேதசாரமாகிய ஸ்தோத்திரப் பிரகா
ணங்கள் முன்னுகங்களிலே சூத்திரருக்கு வெளியாயிறதென்று சொ

ல்லியிருக்கவில்லையா இச்சர்வேத உபதேசங்கள் பரம்பி யிருக்கவில்லையா சாமவேதசாரமாகிய கூடஸ்தப் பிரம்மமென்பதைக் குறிக்கும் மகாவாக்கியப்பொருள் வெளிவந்ததில்லையா அதர்வணவேத மந்திரங்களைச் சூத்திரர் கற்றிருக்கவில்லையா இவ்விதமாக கிரேதாயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் என்றுசொல்லும்முன்னுகங்களிலே வேதம்நாலு வர்ணத்தவர்களுக்கும் வெளிவந்து கற்று அனுஷ்டிக்கபபட்டதாயிருக்க நான்காம் யுகமாகிய கலியுகத்தில் சூத்திரரும அதைக் கற்பார்களென்று சொல்லும் உங்கள் தந்திரம் எப்பேர்கொத்தது.

அந்தணர்முதலிய மூற்குலத்தோர் மூவரும் தத்தமது குலதருமங்களையும் நீதிநெறிகளையும் ஆசாரங்களையும் வழுவிப்போவார்களென்றுசொல்லில் அம் முக்குலத்தவர்களுக்குள் அநேகர் முன்னுகங்களிலேயே வழுவி நடந்தார்களென்று உங்கள் விப்பிரகுலபுராண இதிஹாசங்களில் வேண்டிய சாட்சிகளிருக்க நான்காம் யுகத்திலே மாத்திரம் வழுவி நடப்பார்களென்று கூறுவது மோசமல்லவா இத்தனை தந்திரங்களும் நீங்கள் வயிறுவளர்க்கும்பொருட்டேயாம் என்றறிக,

தேவேந்திரன் தன்குருவாகிய பிரகஸ்பதியை அவமதித்தானென்றும் பிரமகற்பனைப்படி குருவாகக் கைக்கொண்ட விச்சுவுருவனை யாகமுகத்திலே சூலாயுதத்தால் வதைத்தானென்றும் சந்திரன் தன் குருவின் மனைவியைக் கவர்ந்துகொண்டு அக் குருவுக்கு விரோதமாக யுத்தஞ்செய்தானென்றும் இரண்டாம் யுகமாகிய திரேதாயுகத்திலேசூரியகுலத்தரசனாகிய திரிசங்குமகாராசன் தன் குருவாகிய வசிஷ்டமுனியுடனே எதிர்த்து வார்த்தையாடினனென்றும மூன்றாம்யுகமாகிய துவாபரயுகத்திலே வீட்டுமாச்சாரியர் தமது குருவாகிய பரசுராமருடனே எதிர்த்துப் பத்துநாள் யுத்தஞ்செயது அவரைமுறியஅடித்தானென்றும் பஞ்சபாண்டவர்கள் தங்கள் குருமாராகிய துரோணாச்சாரியரைக் கொலைசெய்தானென்றும் கிருபாசாரியர்களுடன் பகைந்துயுத்தஞ்செய்தார்களென்றும் திருஷ்டித்துய்மனான தன் குருவாகிய துரோணாச்சாரியரைக் கொலை செய்தானென்றும் ஜனமேஜய மகாராசன் வேதவியாசர்மேல் கோபங்கொண்டு அவரை யேகதேசமாய்ப்பேசினனென்றும் நீங்கள் செய்த புராணகாவியங்கள் முறையிட நான்காம்யுகததிலேமாத்திரம் சீஷர் குருமாரைப் பகைப்பார்களென்றுபேசுவது என்னவிவேகம்,

பிரகஸ்பதியின் மனைவியாகிய தாரையென்பவள் சந்திரனுடனே விபசாரஞ்செய்துபுதனைப்பெற்றாளென்றும்கௌதமமுனியின்மனைவி

யாகிய அகலிகை இந்திரனுடனே களவுபுணர்ச்சிசெய்து கல்லாகச் சபிக்கப்பட்டாளென்றும் ஊர்வசியென்னும்தேவரம்பை அர்ச்சுனனுடனேகளவிற்கூடவருந்திக்கேட்டும் அவன் அதற்கு உடன்படாததினால் அவனைபேடியாக சபித்தாளென்றும் இன்னும் இப்படி அனேகம் ஸ்திரீ முன்னுகங்களிலே பலருடைய ஸ்திரீகளா யிருந்தார்களென்று சொல்லப்பட்டிருக்க கலியுகத்தில்மாத்திரம் பெண்கள் கற்புநெறி தவறி நடப்பார்களென்பதுவிபரீதம்.

பிறகு ரிஷி தன்னைப்பெற்ற மாதாவைவாளினாற்கொலைசெய்தாரென்றும்பரசுராமர்தாயைச சிரச்சேதம்பண்ணினாரென்றும் பப்ருவாகன் தன்பிதாவாகிய அர்ச்சுனனைக்கொன்றானென்றும் அருச்சுனன்பிதாவாகிய இந்திரனுடனே எதிர்த்து யுத்தம்பண்ணினானென்றும் விஷ்ணு தான்பெற்ற பிள்ளைகளை அருச்சுனனைகொண்டுகொல்லுவித்தாரென்றும்.

பிரம்மதேவர் தன் மகனாகிய நாரதமுனியைச் சபித்தாரென்றும் வசிஷ்டமுனிவர் தான்பெற்ற பிள்ளைகள் நூறுபேரையும் சண்டாளராய்ப்போகும்படி சபித்தாரென்றும் இப்படியே முன்னுகங்களில் பிள்ளைகள் பிதாமாதாக்களுக்குக் கீழ்மையாதிருக்க கொலைபுரிந்தனரென்றும் சாபங் கொடுத்தனரென்றும் புராணங்களிற கூறியிருக்க கலியுகத்திலேமாத்திரம் அப்படி நடக்கு மென்பது உண்மையெனப் போமா இவ்வாறாக உங்கள் விப்பிரகுல ரிஷிகள் பதினெண் புராணங்களையும் மற்ற இதிஹாச சாஸ்திரங்களையும் உங்கள சுயப பிரயோசனத்திற்கு சௌக்கியததிற்கும் கற்பித்த கட்டுக்கதைகளை நாங்க ளனுசரிப்பது நீதிதர்மமா யெங்களாதிவேதமே உண்மையாகையால் அந்தவேதவிதிப்படி வழுவாதுநடப்பது விஸ்வப்ரம்ம வம்மிசஸ்தருக்குரிய கடமையென்று திஷ்டாந்த தாஷ்டாந்தமாய் வேதவிதி யிருப்பதால புராணோக்த பிரகாரம் ஒருக்காலும் நடக்கவொண்ணாது,

(சஉ) ப - கு - ஓ தார்க்கசஹாய ஆச்சாரி நீங்கள் விஸ்வப்ரம்மவம்மிசமா பஞ்சமசாதியல்லவா,

மா - ஆ - ஓ பஞ்சாங்கங் குண்டையனே வேதஸ்ருதிப் பிரமாணமாய் பஞ்சமுக விஸ்வப்ரம்மாவால் பஞ்சகிர்த்தியத்திற்கும் தலைவராய் விளங்காநின்ற விஸ்வப்ரம்ம வம்மிசத்தாரை விஸ்வப்ராமணரெ

ன்று வேதாகமம் முறையிடுவது நிச்சயம. கிராமபார்ச்சகளாகிய உங்க ளுக்கு வேதோக்தமேது கர்மாதிகாரமில்லை விஸ்வப்ராம்மணாளுக்கே அதர்வண வேதத்திலிருக்கிற பீஜாக்ஷரம் ஓம்-அம்-ஐம் ஊம்- ஹியம் ஹிம-மௌம் சாம்-இந்த பீஜாக்ஷரமும் காயத்திரி யென்னப்பட்டதில் உச-வது அக்ஷரத்தில் தகாரமென்றும் சொல்லப்பட்ட அக்ஷரந்தா ன் விஸ்வப்ராம்ம வம்மிசத்தாருக்கு கர்த்தவ்யம் இநன்றியில்தேவதை களுக்கு துவஷ்டப்ராம்ம பஞ்சாங்கம் புரோகிதம் செய்ததினால் தேவ பிராமமணரென்றும் தேவர்களுக்கு ஆதிஉற்பவம் சைவம் வைஷ் ணவம் உண்டாகச்செய்தது எசுர்வேதம் இரண்டாவது அஷ்டகட் ஐ ந்தாவது பநசையில் சொல்லப்பட்டிருக்கின்றது இதற்குச் சுருதிப்பி ரமாணதேவர்களுக்கு துவஷ்டப்ராம்மா புரோகிதஞ்செய்ததினால் தே ப்ராம்மணரென்றும் கர்மாதி காரத்திற்குச் சிருஷ்டிகர்த்தா வாகை யால் விஸ்வப்ராமணரென்றும் நாமமாச்சுது வேதோக்தமாய் கர்மா திகாரம் விஸ்வபிராமணாளுக்கிருக்க அசேதனமாய்ப்பிறந்த கிராம பா ச்சகாளாகிய நீங்கள் புராணோக்தமென்று கர்மங்கள் ஏற்படுத்திய வி யாசன்முதலான ரிஷிவம்மிசநதில உற்பத்தியான உங்களுடைய வம் மிச பாம்பரையைக்கேள் அஃதாவது.

சிஷியஸ்ருங்கோமருகோஜாத
கௌசிகோகாதிநந்தந
ஜமபுகோஜம்புகோத்பத்தி
கௌதமோகௌதசம்பவ
வால்மீகோபரோத்பத்தி
அகஸ்தியகும்பசம்பவ
வியாசோஜுப்தசம்பூதோ
வசிஷ்டாவூர்வசிசுத
நாரதோப்சகிபுத்ரோ
கௌண்டந்யோ முண்டகிசுத
மதங்கஸயமதங்கஸ்யாத
மாண்டவ்யோமண்டுகிசுத
சாங்க்யாசம்சசம்பூதோ
கார்க்கேயோ கார்த்தவசுத
சுநகிகர்ப்பசம்பூதோ
சௌநகாதிமஹாரிஷி

என்னும் மனுஸ்மிருதிப்படிக்கு கலைக்கோட்டார் மான் வயிற்றிலும் கௌசிகர் காசிமகாராஜாவுக்கும், ஜம்புகர் நரியின் வயிற்றிலும், கௌதமர் பசுவின்வயிற்றிலும், வால்மீகர் வேடச்சிக்கும் அகஸ்தியர் கும்பத்திலும், வியாசர் செம்படச்சிவயிற்றிலும், வசிஷ்டர் தாசிவயிற்றிலும், நாரதர் வண்ணாத்திவயிற்றிலும் கௌண்டந்யர் முண்டச்சிவயிற்றிலும், மதங்கர் சக்கிலிவயிற்றிலும் மாண்டவ்யர் தவளைவயிற்றிலும், சாங்கயர் பறைச்சிவயிற்றிலும், கார்க்கேயர் கழுதைவயிற்றிலும், சௌனகர் நாயின்வயிற்றிலும் இப்படிப்பிறந்து அசேதனமாயும் நிர்மூடத்தனமாயும் யாதொருத்தியும் பதியும் மதியும் ஜீவனமுமில்லாமல காய்-கனி-கிழங்கு-வேர்களைப்பிடுங்கித் தின்னுகிறதுமல்லாமல் பலவித மிருகங்களையும் பட்சிகளையும பிடித்து சுட்டுத்தின்கிற உங்களுக்கு ஐந்துவேதமுதலானதில் ஒருமொழிகூட பாத்தியமில்லாததை அறியீர்களோ,

(௪௪). ப - கு - ஓ - மார்க்கசஹாயஆசாரி வியாசரிஷிவேதத்தைச்சிக்கறுத்தாரென்றும புராணமுதலான இதிஹாசங்களைச் செய்துவேண்டிய அற்புதங்களைக் காண்பித்தாரென்றும் சாஸ்திரங்களில் முறையிட்டிருக்க அவரையும் மற்றரிஷிகளையும நீங்கள் இழிவாய்ச்சொல்வது தர்மமல்லவே.

மா - ஆ - ஓ பஞ்சாங்கங் குண்டையனே அந்தரிஷிகள் செய்த அற்புதங்களைக் கிஞ்சித்துச்சொல்லும உண்மையானதாயிருந்தால நாங்களுற விளங்கவேண்டியதே.

(௪௫) ப-கு - ஓ மார்க்கசஹாயஆசாரி அகஸ்தியர் விந்தமலையைப் பாதாளத்திற்புக அழுத்தினாரென்றும் பரமசிவன் பார்வதியை இமயமலையிலே கலியாணமுடித்தபோது ஜனத்திரளின் பாரத்தினால் உத்தரபூமிதாழ்ந்து தட்சிணபூமி உயர்ந்ததைக்கண்டு அவரைச்சிவன் அனுப்ப பொதியமலையிலே போயிருந்து பூமியைச் சமமாக அகஸ்தியர்செய்தாரென்றும் சமுத்திரநீர் கையிலேந்தி ஆசமனம் பண்ணினாரென்றும் துர்வாசமுனிவர் விஷ்ணுவை வைரவர்சூலாயுதத்தால் நெற்றித்துளைபுண்ணவும் இலக்குமியைப்பிரிந்து வருந்தவும் சபித்தாரென்றும் கௌதமர் தேவேந்திரனுக்கு ஆயிரம்யோனிபுண்டாகச் சபித்தாரென்றும் பிருகுரிஷி விஷ்ணுவை பூலோகத்திலே பலபிறவி பிறந்துவருந்தச் சபித்தாரென்றும் இன்னும் பலரிஷிகள் பற்பலஅற்புதங்களைச் செய்தவென்று அநேக நூல்களில் முறையிட்டிருப்பதை நீங்கள் வாசித்துணர்ந்ததில்லையா.

மா - ஆ - ஓ பஞ்சாங்கக்குண்டையனே இக்கதைகளை எவர்கள் தான் நம்புவார்கள் சொல்லுவார் சொன்னாலும் கேழ்ப்பவர்க்கு மதியில்லையா அசாவஸ்துவான கல்மலை செருக்குக்கொண்டதும் விஸ்வரூபம்பெற்றதும் சூரியனைமறைத்ததும் எவ்வாறு இதுநியாய விரோதமான கட்டுக்கதையென்பதறகுச் சந்தேகமாவிந்தமென்னுஞ்சிறுமலை ஒன்பதுகோடி ஐம்பதுலக்ஷம் யோசனைதூர மளவுக்கு மேலானதா யுயர்ந்ததென்பதை யார்நம்புவர் மேலும் சூரியன் ஓர் பிரமாண்டஜோதியாகி வானவீதியின் மத்தியிலே நிலைபெற்றிருக்க அதனைச்சுற்றியோடுகின்ற கிரிகங்களுள் ஒன்றாகிய பூமியின ஒரு சிற்றிடத் ந்மைந்துகிடந்த விந்தமென்னுஞ் சிறுமலை உன்னதங்கொண்டெழும்பி சூரியனை மறைத்துநிற்பது எவ்வாறு பூமியுருளவே மலையும் அப்பூமியுள்ளதே யாதலால் அந்துடன் தானும் கீழ்மேலாயுருளுமே அப்படிக்கிருக்க இந்தப் பொய்யை மெய்யென்று அங்கீகரிக்கும் விவேகிகளுக்கென்னபெயரை வகிக்கலாம்.

கன்னியாகுமரிதொடங்கி மிலேச்சதேசத்தினிறுதிவரைக்கும் கிடக்கிறபூமியின் செம்பாதி பகிர்ந்துபார்க்கில் இமயகிரி தக்ஷணபாகத்தில் நிற்பதேயன்றி உத்தரபாகத்தில் நிற்பதல்லவே இமயகிரி தட்சிணமேதாழ்வதன்றி ஒருபோதும் உத்தரந்தாழாதே அப்படிக் இருக்க உத்தரந் தாழ்ந்ததென்பது ஒருபோதும் ஒவ்வாத பொய்யெனபதற்குச் சந்தேகமில்லை.

ஆதலால் குருமுனியாகிய அகஸ்தியர் விந்தமலையைப் பாதாளத்திற்புக அழுத்தினாரென்பதும் பாறங்குறைவினால்மிதந்ததக்ஷணபூமியைத்தாழ்த்தி சமனுக்க பொதிய மலையிறபோனாரென்பதும் பொய்க்கதைகளேயன்றி உண்மையல்ல

இவர்செய்த மற்றய அற்புதங்களும் மற்றயரிஷிகள்செய்தஅற்புதங்களும் யாதுநியாயத்தாலும் நடபத்தகாத கட்டுக்கதைகளாயிருப்பது வெளியரங்கமாகையால் அவைகளிலொவ்வொன்றிற்கும் பிரேஷதிஷ்டாந்தம் வேண்டுமென்பது அவசியமல்ல.

மேற்கூறிய அகஸ்தியமுனிவர் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவாரென்றிருந்தும் தனது சொற்கமைந்த சிஷனாயிருந்து தானிட்ட ஏவல் பழுதறச்செய்து நிறைறவேற்றிய தொல்காப்பியருக்குச்சாபங்கூறி நெடுங்காலமாக அவர்மேல் சலம்சாதித்தும் இன்னும்

## சித்தூர் ஜில்லா;

அநேகர்மேல் கோபசாபங்களைச்செலுத்தியும் வந்தாரென்று உங்கள் நூல்களே சாட்சியிடுகின்றது.

துருவாசமுனிவர் இந்திரன்முதலிய தேவர்களும் பற்பலமனித ர்களுக்கும் அநியாயமாக சாபமிட்டுக் கொடுங்கோபமுடையவராய்த் திரிந்தவரென்று சொல்லப்படுகின்றது.

இவ்விதமாகவே ரிஷிகளென்று நீங்கள்வியந்துபேசுகிற உங்கள் ரிஷிகளில் அநேகர் பிறர்மேற் கோபஞ்சாதிக்கிறவர்களாகவும் சிலர் கொலைசெய்கிறவர்களாகவும் நடந்து மனிதர்களிலும் அதிகதுஷ்ட ந டையினராகவே இருந்தார்களென்று அவரவர் சரித்திரங்களிற் கண் டிருப்பதினால் இவர்கள் பகல்வேஷக்காரரைப்போல மனிதரைவஞ்சி க்கும்படி ரிஷிகளென்கிற வேஷம்பூண்டவர்களேயல்லாமல் இவர்கள் ரிஷிகளுமல்ல அவ்வற்புதங்களைச் செய்தார்களென்பதும் அதுகளைப் பலவிதமாய் இகழுகிறபடியால் உங்கள் முன்னோர்செய்தது வீண்கற் பிதங்களே.

(சசு) ப - கு - ஒ மார்க்கசஹாய ஆசாரி எங்கள்முன்னோர்களை ப் பலவிதமாயிகழுகிறபடியால் உங்கள்முன்னோர்களின்பெருமையை ப்பற்றிக கிஞ்சித்துத் தெரியப்படுத்தவேண்டும,

மா - ஆ - ஓ பஞ்சாங்கபகுண்டையனே பஞ்சாநகோத்பவாளா கிய எங்களுக்கு ஸந்தஸாதன அபுவனஸபிரத்நவஸ-பர்ந நஸ்வென்னு ம் நாமதேயங்கள் ஆபஸ-லாயந ஆபஸ்தம்பம் திராமிபாநம் கார்த்தி யாயனம் ரௌபாயனம் போதாயானம் இருக்கு எசுர்சாமம் அதர்வ ணம் பிரணவமென்னும் ஐந்துவேதமும் சததியோஜாதம் வாமதேவ ம் அகோரம் தத்புருஷம் ஈசானியமென்னும் பஞ்சமுகத்தி லுற்பவி த்த பஞ்சப்பிரம்ம வம்மிசமான விஸ்வப்பிராமணருக்கு வேதோத்த மாய் ஐந்து தோத்திரம் ஐந்து சூத்திரம் ஐந்துசாகை பிரவரை முத லானது முண்டென்று சொல்லப்படும்.

சாமவேதத்தில் துவஷ்டப்பிரம்மா அவதாரம் சங்காசாரியாரெ ன்று சொல்லப்படும் அவர் சாஸ்வதிபீடம் அந்தபீடத்திற்குசாமவே தசுருதிப்ரமாணம் காண்டாவசனம் பிரகஸ்பதிவனத்தில் அர்த்த ராத் திரியில் இரண்டரைநாழிகையானபிறகு யாருநாசத்தியமென்று சொ ல்லப்பட்ட இரண்டாஞ்சாமத்தில் பிரகஸ்பதிவிராட்டென்றுசொல்ல ப்பட்ட சாமத்தில் ஓம்-கிலீம்-கிறீம்-ஸ்ரீம்-அம்-கரும்-மரும் - சரும்-

மௌனம்-டம்சம்-டஹூம்-வம்-ஆம்-ஹம்-யம் இந்தப் பதினேழு பீஜாட்சரமும் அதில் எட்டு பீஜாக்ஷரத்திற்கு ஏகமாத்திரை த்துவிதமாத்திரை திரிதியமாத்திரை சதுர்மாத்திரையென்னும் இந்த வருணமும் உதாத்த அநுதாத்தா தீர்க்காசுரமென்னும் அசருங்கில் ௱உ௯ - ஓங்காரத்தில் அகார உகார மகாரம்யென்று சொல்லப்பட்ட வுகாரத்தில் துகார-உகார ஓகாரமென்னும் இந்தமூன்றுக்கு அதர்வணவேதத்தில் சிலருங்குள்-கம்.நம்-கம்-கம்-கம்-டம்-டம் டம்-டம்-டம்-டம்-பம்-டம்-பம்-பம்-பம்-இந்த பீஜாக்ஷரத்தினுடைய ஸப்த-ஸ்பரிஸ-ரூப -ரஸ கந்த மஹாபாக்ஷா பிரமாணத்தினுடைய வித்தியாரண்ய பாஷியத்திற்பார்த்தால் விராட்டு பஞ்சமபாகம் மேற்கு விஸ்வப் பிரம்மாவுக்கு உபநிஷதவாக்கியம் சொல்லப்படும்.

(சஎ) பஞ்சமுகமான அகோரமுகத்தில் துவஷ்டப்பிரம்மா அவதாரமெடுத்து சங்கராசாரி சரஸ்வதிபீடஸ்தாபனம் செய்ததற்கு ௱உ௮ ஓங்காரத்தில் இந்த பீஜாக்ஷரத்தால் எந்திரஸ்தாபனம் பீடஸ்தாபனம் ஜலஸ்தம்பம் முதலானதுஞ் செய்தார்.

கிருஷ்ணமூர்த்தி அர்ச்சுனனுக்கு பகவதகீதையில் ஞானோபதேசஞ்செய்தார் அதை ஏழாவது அத்தியாயத்தில் அறியலாம்.

பிரணவ்ஹசர்வவேதஸயா சப்தபுருஷனுவுரி ஓங்காரமென்று சொல்லப்பட்டது இந்துவேதத்திற்கு தாயாய் பாவிக்கப்பட்ட ஓங்காரம் பிரணவம் மூலஸ்தம்பம் பிரமாணமாய்ச்சொன்னது விஸ்வப் பிரம்மாவர்மேலே ஓம் ஹ்ரீம் என்றுசொல்லப்பட்ட பீஜாட்சரத்தைப் பார்வதிசமேதராகிய சிவசாம்பவமூர்த்தி பிரமாநந்தம் பெற்றபோது ஓம் ஹ்ரீம் என்று மூலமந்திரமான பஞ்சாக்ஷரம் விஸ்வப்பிரம்மாக்களுடைய நாம் பீஜமாயிருக்கிற இதை நானுகோத்திரத்தால் உற்பவித்த உங்கள் முன்னோர்களான வியாசன்முதலான விப்பிரர்கள் விஸ்வப்பிராம்மணளைஅடுத்து இந்தமந்திர உபதேசத்தைப் பெற்றபடியால் விப்பிருளென்று சொல்வதேயல்லாமல் பிரும்மணுளென்றும் பிர்ம்ம ரிஷியென்றும் விசேஷிகள் ஒருக்காலுஞ் சொல்லார்கள்.

அதேனெனில் பஞ்சசிருஷ்டியில் இஞ்சித்தாவது உங்களுக்கில்லாமல் ஜோகி ஜங்கமனைப்போல் யாசகஞ்செய்கிறீர்கள் நாங்கள் பஞ்சசிருஷ்டிகர்த்தவர்களாய்க் காரணகர்த்தவ்யம் நித்தியாநித்தியயம் யக்

கியகீர்த்தா யக்கியபக்தா சகலசராசரப்பிரபஞ்ச லயபோஷணை விராட் விஸ்வரூபோனாராயணனாகிய விஸ்வப்பிராமணராகிய எங்களுக்குவேத விதியில்லையென்றுநீங்கள்சொல்வதுநியாயமல்லஎங்களாலேயிவ்வுலக சம்ரட்சணைநடந்து வருகின்றது எங்களைவிஸ்வப்பிரம்மவம்மிசமென்று வேதம்முறையிடுகின்றது நீங்கள் அந்த ஐந்துவேதத்தை வியாசன் நான்குவேதமாய் சிக்கிருத்தானென்று விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாருடைய உற்பத்திமுதலானவைகளை வெகுவாய்மறைந்து உலகத்திற்கு விபரீதபோதனையைசெய்துவருகிறீர்கள்மேலும் சுருதிப்பிரமாணமாம்,

திநிரூபம்மநுரோககம்வாராசியமயசம்பவா
நக்ஷத்ரம்துவஷ்டகிருபஞ்சசில்பியோகந்தனைதநச
விஸவஜஞ்காரணஞ்சைவபஞ்சாங்கமதிதேவத

என்னும் திதிமனுப்பிரம்மாவினாலும்வாரம்மயப்பிரம்மாவினாலும்நக்ஷத்திரம் துவஷ்டப்பிரம்மாவினாலும் யோகம்சிற்பிப்பிரம்மாவினாலும் காரணம் விஸ்வஜ்ஞப்பிரம்மாவினாலும் உற்பத்தியாகையால் இந்தஐந்துபேரும் பஞ்சாங்கத்திற்கு அதிதேவதாளானதுமன்றி பிருதிவிமநுரூபம் அப்பு மயரூபம் தேயு துவஷ்டரூபம் வாய்வுசில்பிரூபம் ஆகாயம் விஸ்வஜ்ஞரூபம் இவர்கள் ஐந்துபேரும் நிர்ணயம்நிர்மாணம் வேதோக்தபிறகாரம் உகும்பம வேதிகை பாத்திரம் முதலானமாங்கல்யமென்னும் விதிக்கிரமங்களும் பூசாவிக்ரக ஆலயக்கிரகம் சாஸ்த்திரம் சேட்சகர்மமும் சகலவர்ணத்தாருக்கும் சேவத்தொழில் காமுத்திரையும்சர்வாதார உற்பத்தியும் இகபரமடையும்படி வேதவிம்களும் ஜயம் அபஜயம் ஜநநமரண உற்பத்தி வறபாடுகளும் ஆம்யிலனித்தவர்கள் பஞ்சப்பிரம்மவம்மிசத்தாராகிய நாங்களேயல்லாமல் நீங்களல்ல அப்படிக்கிருக்க எங்களுக்கு வேதவிதியில்லையென்று எப்படிச்சொல்லலாம் உங்களால் உலகத்தாருக்கு யாது பிரயோசனமில்லை எங்களாலேயே சகலரும் சவுக்கியத்தை அனுபவிக்கிறார்கள் நீங்கள்தாசந்தாள்முதலாகிய பந்துகுலத்தில் உற்பவித்தவர்களென்றுசொல்லுகிறது.

தேவேமுநித்விஜோ ராஜோவைச்யசூத்திரபிடாலக
பசுமலேச்சகண்டாளோ தசவிப்ரப்கீர்த்திதா

(௪அ). மாலகுலமுநபுட்டிமாலனிதுஷிஞ்சு
தவிகுலகேலயிட்டிதொங்கதனமு
ஆகிபுட்டினதாவுஆலிதாசூடரோய்
விஸ்வதாபிராம வினரவேமா

என்னும்வேமாசூதகத்தின்படி பிறந்தார்களென்றும்

பௌரோஹித்தியம் ரஜநிசரிதம் கிராமணித்வம்
நியோகம்மடாபத்தமம் ஹயந்ருதவசனம்ஸாக்ஷிவாதம் பராந்நம்
பரம்ஹத்வேஷம் கலஜநஹிதம் பராணிநாம் நிர்த்தய்த்தவம்
மாஹூதேவோமம் பசுபதேஜந்மாந்தரேபி

என்னும் தருமசாஸ்திரப்படி ஆமசிரார்த்தங்கொடுப்பவனுக்கும் வாங்குபவனுக்கும் மஹாபாவமென்றுசொல்லியிருக்க தங்கள்சீவனவிர்த்தியைக்குறித்துஎந்ததருணத்திலிறந்துபோனாலும்அவர்களுடைய பிதுர்க்களுக்குப் பிதுர்ப்பாவனையாகவும் ஸ்திரீகளுக்கு ஸ்திரீபாவனையாகவும் காலாழி பீலாழி கருவளையல் பொட்டுரவிக்கைசேலைமுதலானதற்கு இசசித்துப்பெறறுக்கொள்வதும் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்னுமூவரும் புருஷசூக்த வேதோக்தப்படிக்கு பிர்ம்மவம்மிசமாயிருந்தும இவர்கள் நமஸ்காரம்பண்ணினால பிராமணன்கூட சரி நமஸ்காரம்பண்ணும்படி வேதவிதியாயிருக்க அப்படிசெய்யாமல் நீங்கள் இடதுகரத்தைத் தூக்கிக்காட்டுகிறது வலதுகறமற்றுப்போனவியாசன்கறபித்த உங்கள் ஆசாரகண்டத்திலிருக்கின்றதோ அல்லதுதிரிமூர்த்திகளைத தூஷித்தவியாசன் வீரமுஷ்டியால் வலதுகரமற்றுப்போனான் உங்களுக்கு இரண்டுகரங்களுமிருக்க இடதுகரத்தைமாத்திரம் காட்டுகிறகாரணமென்ன நீஙகள எப்பேர்ப்பட்டவர்களென்றால் யானையானது தன்மத்தகத்தைகொந்துகிற நிமித்தியம் அங்குசத்தைத்தானே யெடுத்துப் பாகன்கையிற் கொடுக்கிறதுபோலாயிற்று சொன்னபொருளை பக்ஷிமிருகங்களறிந்துகொள்ளும்சொல்லாமலறிகிறவனேபண்டிதன் அப்படியறியாவிட்டால்புத்தியாற்பிரயோசனமென்ன ஆகையாய் நாங்கள் வேதவிதிப்படி செய்யும்விவாகத்தை நீங்கள்புராணவிதிப்படிசெய்ய ஆக்ஷேபனைசெய்தால் துன்பத்துக்காளாகுவீர்கள் அது எப்படியென்றால் தனக்குஇதம்பண்ணுகிறமித்திரன்பேச்சைக்கேளாதவன் மருந்துதின்னாத நோயாளியைப்போல் துன்பத்துக்காளாவான் மேலும் வேட்டல ஓதல் கொடுத்தல்தவசம் சத்தியம் உருதி பொறுமை ஆசையின்மையென்னும் இவ்வெட்டுத்தருமங்களையறிந்திருந்தும் பிறயோசனமிலலை அதேதென்னில் துஷ்டர்கள்வேதாத்தியாயனம் பண்ணியிருந்தாலும தர்மசாஸ்திரம் படித்திருந்தாலும் அவர்கள்வார்த்தையில் நம்பிக்கைவைக்கலாகாது ஏனென்றால் எவன் சுபாவகுணம் எப்படியோ அப்படியே நடக்குமேயல்லாமல் அதற்கு விரோதமாய்நடவாது,

அந்தியஜாதிதுவிஜாதிச்சு ஏகாதர
ஏகையோஙிப்ரஸூத்சுசா தேகசாகேஙஜாயதே.

என்னும் சுலோகப்படி அசேதனமாய் பலபீஜத்திற்குப் பிறந்த வம்மிசமாயிருக்கிற நீங்கள் விஸ்வப்பிரம்ம வம்மிசத்தாராகிய எங்களுக்கு வேதவிதியில்லையென்றும் அவ்விதி உங்களுக்கே உரியதென்று சொல்லுகிறீர்கள் அது உண்மையானால் இது சங்கதிகளைப்பற்றி வேதத்தில் ஓர்மொழியாவது உங்களைக்குறித்துக் கூறுநிருக்கக் காரணமென்ன ஒருபதியுங்கதியும் மதியுமில்லாத ஜோகி சங்கமனைப்போல் கிராமபாச்சகாளாகிய உங்களை யறியாதவாள் உங்கள் பகல்வேஷங்களைக்கண்டு பிரம்மித்து நீங்களே பிரம்மவம்மிசமென்று சொன்னாலுஞ்சொல்லுவார்கள் இதற்குப்பிரமாணம்.

(சுகூ) பிரம்ஹணோபகவான்ருத்ரே க்ஷத்திரியோ
பாமோஹரிஹி வைசியபிதாமகச்சைவா
இந்த்ர இந்த்ர சூத்ர அஜாயதா

என்னும் சுலோகப்படிக்கு பிர்ம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரு ளென்னும் நால்வரும் ஒரு பிரமத்தினிடமாகப் பிறந்திருக்க ஒருவருக்கொருவர் சமமரியாதையிருக்க நீங்கள் இந்தநான்கு வர்ணத்திலும் இல்லாத இழிகுலமாதருக்கு உற்பத்தியானவாள்.

ஜெந்மநாஜாயதேசூத்திரு கர்மணாஜாயதேத்விஜ
பாடேநவிப்ராணும் பிரம்மக்கியானந்தா பிருமஹணு

என்னும் சுலோகப்படி உங்களுக்கு ஜன்மமே சூத்திரனென்றும் பிர்ம்மக்கியானத்தினாலே பிரும்மணனென்றும் வழங்கி வருவதால் ஜென்மமே க்ஷத்திரியனாகிய விஸ்வாமித்திர மஹாரிஷி சபானுக்கிரக சாமர்த்திய முடையவனாயிருந்தும் பிருமணனெனப் பேருமில்லாமல் பிரம்மரிஷியென்கிற நாமமில்லாமற்போனதற்குக் காரணமென்ன,

க்ஷத்திரியனான தசரதமகாராஜாவுக்குப் பிள்ளையாய்ப்பிறந்த ராமன் அரசுசெலுத்துங்காலில் ஒரு சூத்திரன் தபஞ்செய்ததினால் விப்பிருள்வீட்டுப்பிள்ளை பிறந்ததென்று ருமணிடத்தில்முறையிடுருமன்

அந்த சூத்திரனை சம்ஹாரம்பண்ணினதாயும் பின்புவிப்பிருள் வீட்டுப்பிள்ளை உயிர்வாழ்ந்ததாய் நீங்கள் செய்திருக்கிற புறாணங்களை பாமருள் நம்புவார்களேயொழிய பண்டிதாள் நம்பமாட்டார்கள்.

ஸ்ரீராமர் வசிஷ்டன் வியாசன்முதலான ரிஷிகள் இருந்தார்களாக கலியுகம்பிறந்த வெகுகாலத்திற்குப்பின்பு முடிமன்னரில்லாதகாலத்தில் இவாள் உற்பத்தி உண்டாயிருக்க இவாள்நாளையிற்றுறு ராமர்முதலான சக்கிரவர்த்திகள் இவ்வுலகத்தை யாண்டது.

அக்காலத்திலே இந்த வசிஷ்டன்தானிருந்து ராமர்முதலான அரசர்களுக்கு ஆசீர்வாதஞ்செய்து முடிசூட்டினது அந்த ஆசீர்வாதத்தினாற்றானே சுமார் ௫-௰ ௨-லட்சம் கோடி வருடமிருந்து அவாளரசாண்டது இப்பேர்க்கொத்த வல்லவர்களாகிய நீங்கள் இப்பொழுதுமிருக்க இக்காலத்திலிருக்கும் அரசர்களுக்கு வயது நூறுக்குள் இருக்கவேண்டியகாரணமென்ன.

(௫௰) இராமாயணம் விஷ்ணுபுராணம் பாரதமுதலிய நூல்களை ஒன்றுக்கொன்று ஒத்திட்டுப்பார்க்குமிடத்தில் அவைகளில்சொல்லிய சரித்திரங்களும் காலப்பிரமாணங்களும் ஒன்றுக்கொன்றுயுயர்வாயும் தாழ்வாயும் மாறுபட்டேயிருக்கின்றது அதுஎப்படியென்றால் யிலங்கையில் வானரப் படையுடனே யுத்தத்திற்குப்போய் இராட்சத சங்காரஞ்செய்து ஜெயமடைந்தானென்று சொல்லப்படும் இராமச்சந்திரனானவன் சூரியகுமாரனாகியவைவசுதமனுவின்மகன் இக்ஷுவாகுவின் வம்சியிலே (௫௫) ம் தலைமுறையிற்பிறந்து அயோத்திமாநகரத்தை அரசாண்டானென்று சொல்லப்படுகின்றது.

பாரதயுத்தஞ்செய்த துரியோதனன்முதலிய சுற்றத்தவர்களைக்கொன்று குருக்ஷேத்திரமுழுவதையும் ஒருகுடைக்கீழ் அரசுபுரிந்த யுதிஷ்டிரனென்னும் அரசன் அரசுபுரிந்தானெனக் குறிக்கப்பட்டகாலத்திற்கும் இடையே எட்டுலட்சத்து அறுபத்தினாலாயிரம் வருடகாலத்துக்கு இருபத்தொன்பது அரசர்கள் அரசாண்டார்களெனப்படுகின்றது இக்கணக்கின்படி பார்த்தால் ஏகசகட்டுக்குவொருவன்வதக்குறைய ௩௰-ஆயிரம் வருடமளவாக இந்தராஜரீகம் பண்ணினார்களென்று எண்ணவேண்டும்.

## இத்தார் ஜில்லர்

இக்ஷ்வாகு மநுசக்கிரவர்த்தி அரசாண்டகாலத்தில் இராமச்சந்திரன் அரசாண்டகாலபரியந்தம் இடையேயுள்ள தலைமுறை ஷமக்குறைய கூடசென்றதென்றும் அந்தமநுச்சக்கிரவர்த்தியின்காலந்தொடங்கி வதிஷ்டிரன் அருச்சுனன்முதலியோர் இருந்தகாலபரியந்தம் (௱) தலைமுறைசென்றதென்றும்சொல்லப்படுகின்றது இக்கணக்கின்படி இராமச்சந்திரன் இருந்தகாலத்திற்குப் பத்து தலைமுறைக்கு முன்னிருந்தாரென்று சொல்லவேண்டியதா யிருக்கின்றது.

பாரதயுத்தம்நடந்தது துவாபரயுகத்திலேயென்று பாரதமுதலியநூல்களால் விளங்குகின்றது இராமச்சந்திரன் மரணகாலத்திலே துவாபரயுகமாரம்பித்து உதிஷ்டிரமகாராஜனது தம்பியாகிய அர்ச்சுனனுடைய பேரப்பிள்ளையாகிய பரிட்சித்துமகாராசன மகுடாபிஷேகம்பெற்ற காலத்தில் முற்றுப்பெற்றதென்று இதிஹாசகாவியங்கள் கூறுகின்றன அந்ததுவாபரயுகத்திற்கு எட்டுலட்சத்துஅறுபத்துநாலாயிரவருடமென்றுசோதிடங்களிலும கணிதநூல்களிலும் வரையறையாகக்கூறியிருக்கின்றது ஆகவே அக்காலந்தொடங்கி இக்காலம்வரைக்கும் ஐயாயிரம் வருடகாலம் சென்றதாகவேணும்,

கௌசிகராஜனுக்கும் வசிஷ்டமுநிக்கும் நடந்தயுத்தம் இராமச்சந்திரன் இருந்தகாலத்திற்கு அனேகதலைமுறைகளுக்கு முன்னே திரேதாயுகமத்தியில் அயோத்திமாநகரத்தை அரசாண்ட திருசங்கு மகாராசனின் நாள்களிற்சம்பவித்ததென்று இராமாயணத்திற சொல்லுகின்றது பாரதத்திற் சொல்லியபடிக்கு துவாபரயுகத்திலே வதிஷ்டமகாராசனிருந்து அரசாண்ட சிலகாலத்திற்குமுன் குருக்ஷேத்திரத்தை அரசாண்டகுருவென்னும் அரசனின் காலத்திற்கும சகுந்தலையின் கணவனாகிய துஷ்டியந்தமகாராசனின் காலத்திற்கும இடையே நிகழ்ந்ததாகச்சொல்லப்படுகின்றது ஆகையால் இவ்விருகணக்குகளுக்கும் அநேகம் இலக்கம்வருடங்கள்விகற்கப்படுகின்றன இவ்வாறாக உங்கள் முன்னோர்களாகிய விப்பிரர்கள் செய்திருக்கும் புராணங்களும் இதிஹாசங்களும் மற்ற நூல்களும்ஒன்றுக்கொன்றொவ்வாமல் பேதப்பட்டிருக்கும் பிரட்டுருட்டுகளை விஸ்வப்பிரம்ம வம்சஸ்தர்களாகிய நாங்கள் உள்ளங்கைநெல்லிக்கனிபோல் தெரிந்திருக்க எங்களில் நடக்கும்பிரசுபங்களில் உங்களையும் உங்கள்புராணவிதிகளையும் எவ்வாறு அங்கீகாரஞ்செய்யத்துணிவோம் எங்களுக்காதியாகிய வேதமிருக்க அதின்படி நடப்பதே சரியென்று இந்தசபையிலுள்ள பஞ்சாயதாரே தங்களுக்கு விசிதமாய்த்தெரியப்படுத்துவார்கள்.

# அதாலத்துக்கோர்ட்டுதீர்ப்பு.

## மதுமாமிச பட்சணம்.

(௫௧) ப-கு-ஒருவன்சுபாவமான விவேகத்தை தன்னியல்பிலிருக்கவொட்டாமல் கெடுப்பதற்கேதுவாகிய லாகிரி சாப்பிடப்பட்டவனுக்கு புத்திபெவ்வளவு தெளிவுள்ளதாகவிருந்தாலும் அவனை சான்றோர்கள் அறிவிலா மிருகங்களுக்குச்சரியாய்மதிப்பார்களேயல்லது குணவானாகமதிக்கமாட்டார்கள அப்படிப்பட்டலாகிரிசெய்பவருக்குத் துணைபடுகிறவனையும் குடியனென்றே இவ்வுலக மிகழுமல்லவா,

மா-ஆ-ஒ பஞ்சாங்கக்குண்டையனே உங்கள் வம்மிசகுருக்களெல்லாம குருபீடமல்லவோஅவளாலென்னில சத்திபூசையென்றுசாராயத்தை மூன்றுபாத்திரங்களில் வார்த்து சத்தியின்முன்வைத்துபலவிதமாமிசங்களுடனே ஆராதனை செய்து மங்கிலியஸ்திரீகளுடைய பாதங்களைபூசைசெய்து மதுமாமிசங்களை நைவேத்தியஞ்செய்துஅந்தஸ்திரீகளுக்குச சாராயத்தைக்கொடுத்துஅதில மீந்தஎச்சிற்சாராயத்தை குருக்களகுடித்து மற்றவர்களுக்குப பானையிலிருக்கிற சாராயங்களைப்பாத்திரத்தில்வார்த்து மூன்றுவிசை குடிக்கக்கொடுக்கிறார்கள அந்தசசமையத்தில் எல்லாருமஐயுமகிலீம் சௌவும் என்றமாத்திரம உச்சரித்துக்கொண்டே தஙகள்யிடதுகையினாலே பாத்திரத்தைப்பிடித்துககுடித்துக்கொண்டுவலதுகையினாலமாமிசஙகளைபொசிக்கிறார்கள்

அப்பொழுது உங்களகுருக்களுக்கு அடிக்கடி சாராயங்களைக்குடிக்கும்போதெல்லாம் அவருககு சிஷர்கள் மாமிசத்தை யூட்டுகிறார்கள லாகிரியினாலே ஸ்மரணைதப்பி ஆணுமபெண்ணுமவசமாய் விழுந்துகிடப்பாரகள அச்சமையத்திலேவிப்பிரராகிய குருக்கள் எந்தஸ்திரீயை அனுபவித்தாலும் தோஷமில்லையென்று வியாசபகவான் தர்மசாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறானென்று தனக்குஇஷ்டமானஸ்திரீகளை அனுபவிப்பார்கள் துறந்தவனைப்போல வாசகஞானம்பேசி சிலஸ்திரீகள் தங்களுக்கு சிஷராக்கிக்கொண்டு பாலைபூசை புவனைபூசை திரிபுரைபூசை சத்திபூசை காலவைரவபூசைசொர்ணவைரவபூசையென்றுசுக்கிறவாரம் ஆதிவாரம் பௌர்ணமிபஞ்சபர்வம் பாதப்பிரவேசமுதலிய விசேஷநாட்களில் தங்களோடொத்த ஸ்திரீகளும் சிஷர்களும் அப்பூசையில் மாறுபாடாக [illegible]

